சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 17] 1966-ஞு ஆனி-மீ 1-ம் உ (15-6-66) [இதழ்

# ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

1. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்-உரைநடை .... 281
2. திருமந்திரம், ஐந்தாம் தந்திரம்.
(Tirumantiram Tantra the fifth) ... 285
3. தொல்காப்பியர் ஆணை .... 287
4. எங்கும் அவனே ... 291
5. குன்றத்தூர் ... 292
6. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அற்புதத் திருப்பதிகங்கள் .... 296
7. இதுவும் ஒரு ஆற்றல் ... 297
8. தாயுமானவரின்-பராபரக் கண்ணிகள் ... 301
9. வினைப்பகை அஞ்சுவர் விழுமியார் ... 302
10. Hymns of the Tamil Saivite Saints ... 306
11. திருக்கொண்டீச்சரம் .... 307
12. இசையும் இறைவனும் .... 320
13. நிழல் ... 324
14. திருவாசக அநுபூதி உரை ... 327

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 17 | பராபவஹு ஆனித் திங்கள் 1ம்வ [15-6-66] | இதழ் 6

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்
## உரை நடை

பாலகவி வயிநாகரம்,
**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

(மலர் 17. இதழ் 5-ன் தொடர்ச்சி)

கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கொடியிடைக் கடைசியர்குழாம்
குரவையிடு துழனியிற் கொண்டறிரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை
சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளம்
சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்

தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந்
தேரியொடு காணிரம்ப
இழுதுபடு கழனியும் தெய்வமண நாறவேன்
றின்சுவை முதிர்ந்துவிளையும்
காடுபடு செந்நெல்பைங் கன்னனிகர் புள்ளூர
கனிவாயின் முத்த மருளே
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே. 47

யானைத் தந்தங்களை வென்ற கொங்கைக் குவடுகளுக்கு வருந்துகின்ற கொடிபோன்ற இடையையுடைய கடைக்குலப் பெண்கள் கூட்டம் குரவையிடுகின்ற ஆரவாரத்தில், மேகம் திரையும்படி தாவுகின்ற பெரிய வாளை மீன் குஞ்சுகள் உயர்ந்த விண்ணுலகத்திலுள்ள காமதேனுவின் வயிற்றிலே சென்று முட்ட, காளைக்கன்று என்று நினைத்துப் பெரிய மடிமடையைத் திறந்து ஊற்றுகின்ற இனியபால், திணைகளையுடைய கற்பக மரத்தின் இதழ்கள் பொருந்திய பெரிய மலர்களின் தேனருவி யோடு சொரிந்து ஏரியும் கால்களும் நிரம்ப, அதனால் சேறு பட்ட வயலும் தெய்வமணம் வீசுதலைப் பொருந்தி இனியசுவை முதிர்ந்து விளைகின்ற மிகுதியான செந்நெற்பயிர் கரும்பை யொத்து வளருகின்ற புள்ளூரனே! கனிவாயின் முத்தத்தை அருளுவாயாக! கங்கைக்கும் திருமாலின் தங்கைக்கும் ஒப்பற்ற மகனே! கனிவாயின் முத்தம் அருளுவாயாக.

துளிதூங்கு மழைமுகிற் படலம் கிழிக்கும்
துகிற்கொடிகள் சோலை செய்யத்
தோரண முகப்பிற் றவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை யறுகான்மடுத்
தளிதூங்கு தேனிறால் இதுதம்மின் வம்மினென்
றழிநறு வார்ந்து நிற்கும்
அந்நலார் கைகூப்ப ஆடவர் பிழிந்தூற்றும்
அளவிலப ராதயிதெரு

ஒளிதூங்கும் முகமதிக் கொப்பென்கி லேன்விடுதிர்
உயிரொன்று மெனவிடலுமவ்
வுடுபதிக் கடவுள்நற வுண்டமற் றவரினும்
உய்ந்தோ மொழிந்தோமெனுக்
களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே. 48

துளி துளிக்கின்ற மழைமேக படலத்தைக் கிழித்துச் செல்லும் துகிற்கொடிகள் சோலைகளை உண்டாக்கத் தோரண வாயில்களில் தவழ்ந்தேறுகின்ற முழுமதியின் தோற்றத்தை, ஆறு கால்களையுடைய வண்டுகள் உள்ள தேனிருல் இது வாகும்: இதைத் தாருங்கள், இங்கே வாருங்கள் என்று மயக்கத்தைச் செய்யும் கள்ளைக்குடித்த பெண்கள் கைகூப்பி வணங்க, ஆடவர்கள் அம்மதியைப் பிடித்துப் பிழிந்தூற்ற முற்பட்ட அளவில், இது அபராதம் என்று நினைத்து, ஒளி வீசுகின்ற இவர்கள் முகம்மதியாகிய எனக்கு ஒப்பென்று இனிச்சொல்ல மாட்டேன். என் உயிரை விட்டு விடுங்கள் என்று சந்திரன் மேலான கள்ளைக் குடித்த அவரிடத்திலிருந்து பிழைத்துய்ந்தோ மென்று மகிழ்ந்து செல்லுகின்ற மாடங்கள் நிறைந்த கந்த புரியில் வீற்றிருக்கின்ற முருகனே! கனிவாயின் முத்தத்தை அருளுவாயாக! கங்கைக்கும் திருமாலின் தங்கைக்கும் ஒப்பற்ற மகனே! கனிவாயின் முத்தத்தை அருளுவாயாக.

பூமரு வுயிர்க்கும் கருங்கொந் தளத்துவிரி
பூந்துகட் படலமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமும் காலமழை
பொழிமுகிற் படலம்செயத்
தாமரை முகச்சோதி யெழவெழும் சிறுமுறுவல்
தண்ணிலவு செயவெயில்செயத்
தழன்மணிக் கலனகல் நிதம்பமொடு வெம்முலை
தடங்கடலு மலையும்செயத்

தேமருகுழற்கோதை மயிலனீர் கோசிகச்
செம்மலென வேறுபுவனம்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சொல்
செஞ்சொற் பசுங்கிளிசொலக்
காமரு மனங்குழையு மாதர்பயில் வேளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒரு மகன்
கனிவாயின் முத்தமருளே. 49

பூமணம் வீசுகின்ற கரிய கூந்தலிலிருந்து பரந்த மகரந்தப் பொடிப் படலமும் மணமிகுந்த நறிய புகைப்படலமும் கூடிக் காலமழை பொழிகின்ற மேகமண்டலத்தைச் செய்யவும், தாமரை போன்ற முகத்தில் ஒளியெழும்படி எழுகின்ற சிறிய புன்முறுவல் தண்ணிய நிலவைச் செய்யவும் ஒளியையுடைய இரத்தினாபரணங்கள் வெய்யிலைச் செய்யவும் அல்குலும் கொங்கைகளும் பெரிய கடலையும் மலையையும் செய்யவும் மணமிக்க கூந்தலையுடைய பெண்மயிலை ஒத்தவர்களே! நீங்கள் விசுவாமித்திர முனிவனைப்போல் வேறு புவனங்களைப் புதிதாகப் படைக்கவும் வல்லீர்களென்று மணஞ்செய்து கொண்டு இடையே பிரிந்த கொழுநர்கள் சொல்லிய சொல்லைச் செஞ்சொல்லை யுடைய பசிய கிளிகள் சொல்ல, விருப்பத்தையடைகின்ற மனங்குழையு மாதர்கள் பயிலுகின்ற வேளூரனே! கனிவாயின் முத்தத்தை அருளுவாயாக: கங்கைக்கும் திருமாலின் தங்கைக்கும் ஒப்பற்ற மகனே! கனிவாயின் முத்தத்தை அருளுவாயாக.

(தொடரும்)



# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 17. இதழ் 5-ன் தொடர்ச்சி

### God can be reached only by thine own devotion

### தன் முயற்சியிலாயே இறைவனை அடையலாகும்

116. சிவமல்லதில்லை அறையே! சிவமாம்
தவமல்லதில்லை, தலைப் படுவார்க்கிங்கு;
அவமல்லதில்லை, அறு சமயங்கள்;
தவம்வல்ல நந்திதான் சார்ந்துய்யு நீரே!

Proclaim thou this;
There is nothing except Siva
No tapas except that be for Him.
The Six Faiths are nothing but a dreary waste;
Do thou seek Nandi of mighty penance;
Thou shalt indeed be truly redeemed.

நீ உலகுக்கெல்லாம் இதனை எடுத்தோதுவாயாக; சிவமன்றி யாதுமில்லை; சிவனை நோக்கிச் செய்வதன்றி வேறு தவமுமில்லை; அறுசமயங்களும் பயன் அற்றவை. தவத்தில் மிகுந்த நந்தியை அடைந்து உய்வதே திறன்.

## The Six Faiths sought not Freedoms Fundamental

## அறுசமயமும் பரமுத்திக்கு வழிகாட்டவில்லை

117. அண்ணலைநாடிய ஆறு சமயமும்
விண்ணவராக மிகவும் விரும்பியே
முன்நின்றிழிய முயன்றிலர்; ஆதலால்
மண்ணின்றெழியும் வகையறி யார்களே.

They of the Six Faiths sought the Lord
Only for heavenly state to gain;
They sought not to be rid of the thorns of bondage,
And so knoweth not to be rid of this world materiality.

அறுசமய மாக்களும் விண்ணவர் நிலையினை அடைய எண்ணியே அண்ணலை நாடினர்; பாசமாகிய முள்ளிலிருந்து விடுபட முயன்றாரில்லை; எனவே மண்ணிலே பிறந்திறந்து மடியும் நிலையிலேயே இருக்கின்றார்கள்.

## The Path of Siva alone leadeth to Final Liberation

## சிவகதி ஒன்றே பிறவித்தளையை அறுக்கவல்லது

118. சிவகதியேகதி; மற்றுள்ள எல்லாம்
பவகதி; பாசப்பிறவி யொன்றுண்டு;
தவகதி தன்னெடுநேர்; ஒன்று தோன்றில்
அவகதி மூவரும் அவ்வகையாமே.

The Path of Siva alone is the finite Path;
The Other paths but leadeth to earthly sorrows;
And sure birth in bondage returneth to thee;
Do thou walk in the Holy Path;
And when the One appeareth,
The triad Impurities that your destruction encompasseth
Will, of themselves, meet their own destruction.

(தொடரும்)

# தொல்காப்பியர் ஆணை

திரு. இர. குழந்தைவேலு அவர்கள், M. A.,
கோயமுத்தூர் – 14.

## 1

மனவொப்புள்ள தூய மணமே நாட்டில் பரவித் தழைத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் தம் ஒல்காப் புலமை ஆணை. இத் தமிழ் ஆணையைப் பேராசிரியர் சுந்தரனூர் தம் மனோன் மணீயத்தகத்துத் தளர்வுருது பாராட்டினூர்; கவர்ச்சி இழக்காது கூத்திலக்கியத்துக் கதை சூழலுக்கிடையே இனிக்கச் செய்தார்.

## 2

மனோன்மணிக்குத் தோழி நல்லாள் ஆவள். அத் தோழி, மனோன்மணி நெஞ்சத்தைக் காதலுணர்ச்சி அடிமையாக்கிய இயல்பைத் துணிந்தாள். நெஞ்சு நிறைந்த ஆண்தகையே மாருது மனோன்மணிக்கு மணவாளனுகவேண்டுமென்று தன் அசையாத விருப்பத்தை,

> ''பேரிலா ஊரிலாப் பெரியோன் அவன்ருன்
> யாரே ஆயினும் ஆகுக, அவனேநீ
> அணையுநாள் அடியேன் மணநாள் அன்றேல்
> இணையிலா உன்னடிக் கின்றுபோல் என்றும்
> பணிசெயப் பெறுவதே பாக்கியம் எனக்குக்
> கடமையும் பிறவும் கற்றறி யேன்விடை
> மடமையே ஆயினும் மறுக்கலை மணியே!'' (v. ii. 152 – 158)

என்று உறுதியாக எடுத்துரைத்தாள் வாணி.

மனோன்மணியின் திருமண நிகழ்விற்கு முன்னர் 'உயர்ந்த பால தாணை'யை முன்னிலையாக்கி,

"நீர்நிலையின் முதலையின்வாய் நிலைகுலைந்த ஒருகரிமுன்
ஓர்முறையுன் பெயர்விளிக்க உதவினைவந் தெனவுரைப்பர்;
ஆர்துயர அளக்கர் விழும் அறிவிலியான் அழைப்பதற்குள்
பேர்தெரியேன் ஆயிடினும் பிறகிடல்நின் பெருந்தகையோ.

பாரரசர் துகிலுரியப் பரிதவிக்கும் ஒருதெரிவை
சீர்துவரை நகர்கருதிச் சிதைவொழிந்தாள் என உரைப்பர்;
ஆர்துணையும் அறவிருக்கும் அறிவிலியான் அழைப்பதற்குள்
ஊர்தெரியேன் ஆயிடினும் உறுதிதரல் உனக்குரித்தே.

மறலிவர மனம்பதறும் மார்க்கண்டன் உனதிலிங்கக்
குறிதழுவி அழிவில்வரம் கொண்டான்முன் எனவுரைப்பர்;
வெறிகழுமிப் பொறியழியும் வெம்பாவி விரவுதற்குன்
நெறியறியேன் ஆயிடினும் நேர்நிற்றல் நினதருளே"

(v, iii, கொச்சகக் கலிப்பா, 1, 2, 3)

என்று ஒருத்தியின் வழுவாத கற்பு நனிசிறுமையுருது ஒளிர்தற்கு, ஒழுங்கு நெறியை அவாவி அறிவுமிக்க வாணி இறைஞ்சினாள். அவ் வேண்டலில் முன்னைய விடாப்பிடி எண்ணத்திற்கு முரணுதபடி 'பேரிலா ஊரிலாப் பெரியோன்' என்று குறித்த மனோன்மணியின் மன்றலஞ் செல்வனையே முதலிரண்டு கொச்சகக் கலிப்பாக்களின் இறுதித் தொடர்களுள் அமைத்து இசைத்த முதற்சொற்றொடர்களால், வாணி உள்ளிய உரம் ஏத்துதற்குரிய தனிப்பண்புடையது.

3

முனிவர் திருக்கூட்டத்தில் வைத்து எண்ணத்தக்க வாணி நயந்த வழியில், பழி குடிகொள்ளா மனோன்மணியின் புகழ் ஈட்டிய கற்பு, வழிவழி ஓங்கப் 'பால்வரை தெய்வத்'தருள் வேட்கும் நெஞ்சத்தோடு,

"ஒருதனி முதல்வன் உணர்வன் உன்னுளம்
உன்னன் புண்மையேல் இன்னமும் காப்பான்."

(v, iii, 181–182)

என்றார் முனிவர் சுந்தரனார்.

அந் நிறைமொழி மாந்தர் தம் தெய்வ வழிப்பாட்டால் அறம் வென்ற வலிமையை,

"இங்கே நீயுளை! என்னுயிர் அமிர்தே" (v, iii, 190)

என்று பேராசிரியர் சுந்தரனுர் உணர்த்தினர், இங்ஙனம் தெளிந்த 'பால தாணை'யது நன்னெறியை,

"சொற்பால் அமுதிவள் யான்சுவை
என்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வம் தந்தின்று
நான்இவ ளாம் பகுதிப்
பொற்பார் அறிவார் புலியூர்ப்
புனிதன் பொதியில் வெற்பில்
கற்பா வியவரை வாய்கடி
தோட்ட களவகத்தே"

என்று திருக்கோவையார் இன்புறுத்திய உறவில் இணைத்துக் கற்று உவப்புறலாம். ஈண்டு, 'நற்பால் வினைத் தெய்வத்' துணையால் புருடோத்தமனும் மனோன்மணியும்,

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பா தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"

என்னும் நிறையுடைப் பெருமையைக்—காதல் வல்லமையை—உலகிற்குக் காட்டலாயினர் என்பது வெளிப்படும்.

## 4

மனோன்மணி தன் காந்தள் காதற்கைகளை, மலர்களால் கோத்த மாலையாக இணைத்துத் தழுவிப் புருடோத்தமன் மார்பில் சாய்ந்த வண்ணமிருந்த அழகை,

"வாராய் ஜீவக! பாராய் உன்மகள்
தாராத் தன்னிரு கைதோட் சூட்டி
எண்படு மார்பிடைக் கண்படு நிலைமை
இருமனம் ஏனினி; என்றுமிப் படியே
மருமகனு மகளும் வாழ்க! வாழ்த்துதியே."

(v, iii, 224 - 228)

என்று வாழ்த்திச் சிவகனரை வாழ்த்தச் செய்தார். இங்ஙனம், 'உயர்ந்த பால தாணை'யால் அனைவரும் அறிய வரைந்து கொண்ட கற்புக் காட்சி,

"நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணையல் அன்னவிவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே" (குறுங். 229)

என்ற மோதாசனர் தம் பாடலில், ஊழால் 'ஒத்த கிழவனும் கிழத்தியும்' மணமக்களாகிக் கண்மணி குளிர்ப்பக் காட்டிய காட்சிப் பொலிவொடு ஒத்துள்ளது.

5

இவ்வண்ணம், பேராசிரியர் சுந்தரனர் மனவிசைவு கலந்த கற்புமணக்கும் நெறியை—நல்லூழ் இயைத்து வைத்து வாழ் வாங்கு வாழவைக்கும் வழியை — மனேன்மணீயத்தகத்து வெளியிட்ட நுண்வளம், தொல்காப்பியர் காட்டிய உள்ளப் புணர்ச்சி ஒழுங்கு மரபை ஆணையாக ஏற்ற நெஞ்சத்து வளர்ச்சி யாகும்.

---




திரு. ஆ. துரை அவர்கள்.

—ooOoo—

நீலவானத் திருள்மறைவில் நின்று கொண்டு
நித்திலமாய் நிறைமதியாய் ஒளிரு கின்ற
மூலஞானப் பேரழகன் ஒருவன்! — அவனே
முதியவனும் கருணைமிகும் இறைவன்!!

சோலையதாய்த் தழைத்துள்ள பெருநி லத்தில்
சுடுமணலாய் விரிந்துள்ள புழுதி தன்னில்
வேலேந்தித் திரிகின்றான் ஒருவன்! — அவனே
விரிவுலகைப் படைத்திட்ட இறைவன்!!

முட்டையினை நிரப்பிவிட்டுப் பின்ன ரங்கே
முழுதுமாய் இல்லையென் றுக்கு கின்ற
சாட்டையினை வைத்திருப்பான் ஒருவன்! — அவனே
சதிராட்டம் செய்கின்ற இறைவன்!!

வீதியினில் பிச்சைகேட் டுழலு கின்ற
விதியற்ற முடவன்கை ஓடு தன்னில்
நீதியுடன் உணவிடுவான் ஒருவன்! — அவனே
நீள்விசும்பாய் நிற்கின்ற இறைவன்!!

தீயினிடைப் பனியினிடைப் புனித மான
தென்றலிடைத் தலைவனாய் உருவு காட்டிக்
காயினிடைக் கசக்கின்றான் ஒருவன்! — அவனே
கனியிடையே சுவைக்கின்ற இறைவன்!!

சீரடைய மரஞ்செடியைத் துளிர்க்க விட்டுச்
சிறுபோதில் பங்குனியில் உதிர்த்து விட்டு
மாற்றுடையை அணிகின்றான் ஒருவன்! — அவனே
மாயைமிகும் சக்தியெனும் இறைவன்!!

---

# குன்றத்தூர்

திரு. சிவ. அருண்மொழித்தேவன் அவர்கள்
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

## அமைந்த இடம்:

"சான்ருேர் வாழ்" தொண்டை நன்ருடு எனப் புகழ்பெற்ற தொண்டை நாட்டின், புலியூர்க் கோட்டத்து குன்றை வள நாட்டில் குன்றத்தூர் அமைந்துள்ளது. இவ்வூர் குன்றுகளே அடுத்து இருப்பதால் குன்றடுத்த ஊர் எனப் பெயர் பெற்று, அதுவே பின்ருளில் குன்றத்தூர் என மருவியிருக்கலாம் எனத் தெரிகிறது. இற்றை நாளில் இது சென்னேக்குத் தென்மேற்கே பதிருறு கற்ருெலேவிலும், பல்லவபுரம் புகைவண்டி நிலேயத்தி லிருந்து மேற்கே நான்கு கற்ருெலேவிலும் அமைந்துள்ள சிறு நகராகும்.

சேக்கிழார் பிறந்ததும், அருணகிரியார் பாடியதுமாகிய பெருமை உடைய இவ்வூரில் நாற்புரமும் நோக்கிய வண்ணம் நான்கு கோவில்கள் உள்ளன. அவற்றின் சிறப்பை நாம் நோக்குதல் நலமாகும்.

## சிவன் கோவில்:

தென் திசை நோக்கிய வண்ணம் கந்தழிசுவரர், வாலீசு வரர் கோவில்கள் அமைந்துள்ளன. இக்கோவில்களில் சிற்சில கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவ்வூரை அடுத்த திரு நாகேச்வரத்தில் கிழக்கு நோக்கிய நாகேச்வரர் அமைந்துள் ளார். ஆங்கு சுமார் நாற்பதிற்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்ருல் பல அறிய செய்திகளே அறிய முடிகிறது.

## * பெருமாள் கோவில்:

இது மேற்கு திசை நோக்கி அமைந்துள்ளது. இவ்விறைவன் பெயர் திருவூரகப் பெருமாள் என்பதாகும். வெளிப்புற கோபுரம் மூன்று நிலயுடன் நின்ற நிலயில் உள்ளது. இது கட்டிய காலம் நன்கு புலனுகவில்லே. ஆனுற் புதுப்பிக்கப் பட்டது 18-ம் நூற்ருண்டின் முதற் பகுதியாகும். இக்கோயிலின் பெயர் முன்பு "இளந்தத்த விணணகர்" எனப்பெயர் பெற்றிருந்ததாகத் தெரிகிறது.

## குமரவேற் கோவில்:

மலேமீது வடதிசை நோக்கி இருக்கும் இக்குமரவே லாலயம் கி. பி. 18-ம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் கட்டப்பட்டதாகத் தெரிய வருகிறது. இம்முருகன் மீது அருணகிரிநாதர் மூன்று திருப்பாடல்களேப் பாடியுள்ளார். இக்கோயிலிலும் சிற்சில கல்வெட்டுக்கள் காணப்படுகிறது.

## சேக்கிழார் கோவில்:

கிழக்கு நோக்கி வீடமைத்து 12-ம் நூற்ருண்டில் வாழ்ந்த தெய்வச் சேக்கிழார் இல்லமே இற்றை நாளில் கோயிலாக அமைந்துள்ளது. பக்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய சேக்கிழார், குலோத்துங்க சோழனுக்கு (II) அமைச்சராக இருந்து பெரிய புராணமியற்றி மக்கட்கு வழங்கியமையாலேயே இவ்வூர் பெறர்கரும் பேறு பெற்றது எனலாம். இக்கோவிலிலும் முருகன் கோவிலிலும் நாளொன்றுக்கு இருகால ஆராதனே நடைபெறுகிறது. வாரமொருமுறை பெரிய புராண விரிவுரையும் ஆற்றப்பட்டு வருகிறது.

## ஊரின் சுற்றுப்புறங்கள்:

இக்குன்றத்தூரின் வடகோடியில் சேக்கிழாரின் தம்பி, பாலருவாயரால் எடுக்கப்பட்ட குளம் ஒன்றமைந்துள்ளது. சேக்கிழாரால் எடுக்கப்பட்ட (அமைக்கப்பட்ட) நாகேச்வரர்

---

* இக்கோவிலினுள் ஒரு கல்லிலும் ஒரே மரத்திலும் அமைக்கப்பட்ட நுப வேலேப்பாட்டை டக் கண்டு மகிழலாம்.

கோவில் இவ்வூரை அடுத்து அழகுடன் மிளிர்கின்றது. அவ்விடம் இப்போது வடதிருநாகேச்வரம் என வழங்கப்படுகிறது. குன்றத்தூருக்கு மேற்கே ஒரு கற்றொலைவில் செம்பரம்பாக்கம் என்னும் பெரிய ஏரி அமைந்துள்ளது. இவ்வேரியால் நாற்பத்தி நான்கிற்கு மேற்பட்ட கிராமங்கள் நீர்ப்பாசன வசதியைப் பெறுகிறது. சுருங்கக் கூறின் சென்னையின் சுற்றுப் புறங்களின் ஆக்கத்திற்கு மழிவிற்கு மிவ்வேரியே கருவியாக அமைந்துள்ளது எனலாம்.

நடைபெறும் சிறப்பு விழாக்கள்:

குன்றத்தூர், முருகன் கோவிலில் ஐப்பசி மாதத்தில் சூரன் சம்ஹாரம் (வள்ளித் திருமணம்) நடைபெறும். அதே திங்களில் மகா கந்தசட்டி இலட்சம் அர்ச்சனை (சென்ற ஆண்டு முதல்) நடைபெறும். வைகாசித் திங்கள் பூச நாளுக்கு 2 நாட்கள் முன்பாக ஒய்வு பெற்ற வக்கீல் திருவாளர் T. M. கிருட்டிணசாமி அய்யர் அவர்கள் தலைமையில் திருப்படி விழா நடத்தப்பெறும். ஒவ்வொரு கிருத்திகை தோறும் சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும்.

சேக்கிழார் கோவிலில் ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் பூசநாளை இறுதியாகக் கொண்டு *பத்து நாட்கள் திருவிழா நடைபெறும். அவ்வமயம் மாலை 6–30 மணி முதல் இரவு 10–30 மணி வரை கோவில் முற்றத்தில் மறை திருநாவுக்கரசர் அவர்கள் தலைமையில் சைவப் பேரன்பர்களைக் கொண்டும், தமிழ்ப் புலவர்களைக் கொண்டும் சிறப்பு சொற்பொழிவுகள் நடைபெறும். அதே பத்து நாட்களில் காலையும் மாலையும் சுமார் 3 மணி நேரத்திற்கு பெரிய புராண விரிவுரை வகுப்பு நடைபெறும். அதைக்கேட்க வெளி மாவட்டங்களிலிருந்தும்

* பத்தாம் நாள் [வைகாசிப் பூசம்] சேக்கிழார் சோதியில் கலத்தல் நாளாகக் கொண்டு நடைபெறும் விழாவிற்கு, இமயம் முதல் குமரிவரை அன்னதானத்திற்காக 140 தருமங்கட்கு ரூ. 24 18,500 முதற் பொருள் அளித்து வரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் இந்நாளும் மகேசுவர பூசைக்காக ரூ. 20,000 முதற்பொருள் ஒதுக்கியுள்ளதை யாவரும் அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

பலவித அன்பர்கள் வருவர். அவர்கட்கு உறை வசதியும் சேக்கிழார் திருப்பணிக் கழகமே அமைத்துக் கொடுக்கும். மாசி மாதம் 20-ம் தேதி முதல் 23-ம் தேதிவரை சூரிய உதய ஒளி சேக்கிழாரின் திருமுக மேல்படும் நாளாகும். அந்நாட்களே சூரிய பூசைக்குரிய நாளாகக் கொண்டாடப்படும். அது தவிர, ஒவ்வொரு மாதமும் பூசநாளன்று உள்ளூர் அன்பர்களால் விசேட அபிடேகம் நடைபெறும்.

முடிவுரை:—

சேக்கிழார் வழியில்*வந்த எட்டு குடியினர் இன்றும் இக் குன்றத்தூரில் வாழ்ந்து வருகின்றனர். சேக்கிழார் காலத்தில் பலவித சிறப்புக்களுடன் இருந்த குன்றத்தூர் [சேக்கிழார் பிள்ளைத் தமிழ், தாலப் பருவம், பாடல் 5] காலச் சுழற்சியால் மாறுபட்ட நிலையிலுள்ளது. இருப்பினும் பல அன்பர்கள் உதவியால் மேன்மை (சிறிது) அடைந்துள்ளது. மேலும் இதை உயர்வுபடுத்த அன்பர்கள் முன்வரின் நலமாகும்.

சேக்கிழார் சேவடிகள் வாழ்க.

---

*மாண்புமிக்க முதலமைச்சர் கனம்–மி. பக்தவச்சலம் பி. ஏ., பி. எல்., அவர்கள் சேக்கிழார் பரம்பரையினர் என்பது ஈண்டு நினைவு கூர்தல் தகவுடைத்தாகும்.

# சுந்தர மூர்த்தி சுவாமிகளின்
# அற்புதத் திருப்பதிகங்கள்
## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

---

### Tiruttondattogai.

திருத்தொண்டத்தொகை: பண்: கொல்லிக்கௌவாணம்

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர் கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

Sakkiya Nayanar did never forget the holy feet of Umapati and I am a devotee of St. Sakkiyar.

I serve the saints, Sirappuli and Siruttondar of Sengattangudi.

I am the slave of Kazharirrarivar (Cheraman Perumal), the royal philonthropist.

I am the servant of the devotees of Kananatha Nayanar of Sikali.

And the slave of Kurruva Nayanar of Kalandai am I, the servant of the Lord at Arur.

---

(To be continued)

# இதுவும் ஒரு ஆற்றல்!

திருமதி. அனந்தலக்ஷ்மி சுப்ரமணியம் அவர்கள்
5, வினாயகமுதலி தெரு, சென்னை-1.

ஆறறிவு படைத்த மனிதனின் இருதயம் அவன் கைப்பிடி அளவுதான். ஆனால் அவன் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்கட்கோர் அளவில்லை. அவன் எண்ணங்களின் ஓட்டத்தாலேயே இருந்த இடத்திலிருந்தே மிக வேகமாக உலகம் முழுவதும் சாடி விடுகிறான். ஒரே நிமிடத்தில் ஒரு கோட்டையைக் கட்டுகிறான். அடுத்த நிமிடத்தில் அதனை அடித்தளத்தோடு தள்ளி, அதன் இடத்தில் மற்றொன்றை எழுப்புகிறான். அவன் ஆசைகளையும் தன் கொள்கைகளையுமே திண்ணிய கற்களாகக் கொண்டு தன் மனப்போக்கிற்கேற்ப இலட்சிய உலகத்தைப் படைத்துவிடுகிறான்.

இதுமட்டுமல்ல. இவன் உள்ளத்தில் பொங்கி எழும் உணர்ச்சிகட்கு ஏற்ப, அவற்றின் வேகத்தில்தான், மனிதன் உள்ளத்தில் பிறக்கும் கற்பனைப் பறவையும் சிறகடித்துப் பறக்கிறது. அவன் மகிழ்ச்சிப் பெருக்கில் இருக்கும்போது, தன்னை விட பாக்கியசாலி இல்லை என எண்ணி மகிழ்கிறான். ஆனால் அதே மனிதன் துன்பத்தில் திளைக்கும்போது, தன்னைத்தான் உலகத்துத் துன்பம் எல்லாம் வந்தடைவது போலவும், தான் மட்டும் இப்படித் துன்பத்தில் உழல, உலகம் முழுவதும் இன்பம் ஒன்றையே மகிழ்வது போலவும், உலகமே தன்னைப் பார்த்து கைகொட்டி நகைப்பது போலவும் எண்ணி வாடுகிறான்.

இத்தகைய தனி ஆற்றல் காதலுக்கும் புறம்பானதல்ல. காதலன் தன்னைக் கூடித் திரிந்த நாளிலே, அன்பின் திளைப்பிலே, பிரிவையே மறந்து வாழ்கிறாள் தலைவி. பிறவிப் பயன்

எய்தியது போன்ற பெருமை அவளுக்கு, உலகத்தை மறந்து இருக்கும் அவளுடைய தலைவன் அவளை விட்டுச் சில நாள் பிரிந்து இருக்கட்டும். அப்போது அவள் தன்னைக் கண்டு கழி விரக்கம் கொள்கிறாள். தன்னைப் போன்றவர் இவ்வுலகில் வாழக் கூடாது என்று எண்ணும் அளவுக்கு வருந்துகிறாள். தான் ஒருத்தியைத் தவிர, உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் அன்புப் பிணைப்பில் திளைப்பதாக எண்ணி வாடுகிறாள். இப்படி நிலைமையைத்தான் ஒவ்வொரு அன்புடை நெஞ்சமும் அடையும். நாம் இன்று இங்கு காணப்போகும் தலைவியும் விதிவிலக்கல்ல.

ஒரு கடுமையான பாலையின் வழியே கொடும் வெயிலில் செலவு மேற்கொள்ள, ஒரு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கின்றான். அத்தலைவன் சென்ற ஒரு சில நாட்களிலேயே அவன் பொருட்டாக வாடி அழிகிறாள். தலைவன் செல்லும் வழி யெல்லாம் என்னென்ன காண்பான், அவற்றையெல்லாம் பற்றி என்னென்ன நினைப்பான் என்றெல்லாம் எண்ணிப் பார்ப்பதேத் தொழிலாகி விட்டது. இதுவரை சென்று வந்தோர், அல்லது கணவன் முன்னொரு முறை சென்று வந்தது இவற்றையெல் லாம் செவிவழி கேட்டு வந்தத் தலைவி, தன் கற்பனைக் கண் களால் பாலை வழியைக் காணத் தொடங்கி விட்டாள். தான் காணும் கற்பனை ஓவியத்தை நமக்கும் மூன்று காட்சிகளாகக் காட்டுகிறாள்.

முதல் காட்சி, கண்டார் அஞ்சுறும் பாலைநிலம். நிலம் பிளந்து வெம்மையையும் நெருப்பையும் கக்குகின்றன. நெருப் புக் குவியல்களாய் மண்மேடுகள் காட்சியளிக்கின்றன. இப் படிப்பட்ட இடத்தில் நீரேது? ஆனால் ஏதோ அதிர்ஷ்ட வச மாக, ஒரு இடத்தில் சிறிது நீர் தேங்கி நிற்கிறது. அந்த வழி யாக ஒரு யானைக் குடும்பம் வருகிறது. தாய், தந்தை, மகவு ஆகிய மூன்று யானைகள். இவை வெயிலின் களைப்பில் அசைந் தாடிக்கொண்டு வருகின்றன. தாக மிகுதியால், இவற்றின் கண் ணோட்டம் நீர் தேடுவதில் தான் இருந்தது. இவை மூன்றும் சின்னீர் தேக்கத்தைக் கண்டவுடன், அங்கே நின்றுவிடுகின் றன. சிறு யானை இக்குட்டையில் குடித்துப் பின் கலக்கியும் விடுகின்றது. பின்பு, ஆண் யானையோ, பெண் யானை முதலில்

குடிக்கட்டும் என்று காத்திருந்து அது குடித்தவுடன் தான் குடித்ததாம்.

"அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின் உண்ணுங் களிறெனவும் உரைத்தனரே."

(கலித்தொகை 11)

மற்றொரு காட்சி. காட்டில் வாழும் உயிர்கள் இறக்கும் படி, மரங்கள் உதிர்ந்து, நீர் வறண்டு போய்விட்டது. மரத்தில் இலைகள் காய்ந்து சருகாகி உதிர, அதில் வாழும், பறவைகளுக் குத் தங்க இடமில்லாமல் போய்விட்டது. இப்படி அவதிப்பட்ட வைகளுள் ஒரு புரு ஜோடியும் உண்டு. பெண் புரு வெப்பம் தாங்க இயலாமல் வருத்தமுற்று இருந்தது. அதைக் காணப் பொறாத ஆண் புரு, அன்பினால் எழுந்த கழிவிரக்கத்தோடு, தன் மெல்லிய சிறகை அசைத்து காற்றெழுப்பி வெப்பம் தணிக் கிறதாம்.

"இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே."

(கலித்தொகை 11)

அதேப் பாலையில் கடைசிக் காட்சி. வெப்பத்தின் காரண மாக அங்கே வளர்ந்து இருக்கும் மூங்கில் செடியும் வாடி வதங்கி கட்டையைப் போல் மாறிவிடுகின்றன. இதன் காரண மாக நிழல் என்பதே காணப்படவில்லை. இதன் காரணமாக எந்த உயிரும் அந்த வழியே போகத் துணியவில்லை. இப்படி யிருக்க, ஒரு பெண் மானும் ஆண் மானும் அவ்வழி வருகின் றன. நிழல் என்பது அடையக்கூடாதபடி அருமையாக இருப் பதைக் கண்டு பெண் மான் வருந்தி நிற்கிறது. இதைக் காண ஆண் மானின் உள்ளம் பொறுக்கவில்லை. உடனே தன் உட லின் நிழலையே, தன் துணைக்கு அருநிழலாய் ஈந்ததாம். எப்படி இருக்கிறது காட்சி!

"கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னருந் தகையவே காடென்றார், அக்காட்டுள்
இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே."

(கலித்தொகை 11)

இந்த மூன்று காட்சிகளை – உள்ளத்தைத் தொடும் காட்சிகளைத் தான் கண்டது போல தன் தோழிக்குக் கூறுகிறாள். இவள் என்றுமே பாலைவழி நடந்தவள் அல்ல. வித்தின்றி மரம் முளைக்காது. அதுபோலத்தான் எண்ணத்தின் வளர்ச்சிக்கும் ஏதோ ஒரு அடிப்படை செய்தி வித்தாக நிற்கும். இங்கு பாலையைப் பற்றி செவி வழி கேட்ட செய்தியேக் காரணமாக விளங்கும். இதன் மூலம் தான் அனுபவிக்காத ஒன்றை பிற உயிர்களும் அனுபவிப்பதாகக் கூறித் தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள். தன்னைப் பிரிந்தவன் தன்னைவிடக் கீழான உயிர்களும் பாசத்தால் பிணிக்கப்பட்டு ஈருயிர் ஒருயிராய் மாறியமையைக் கண்டு திரும்புவானா என்ற ஏக்கத்தின் எதிரொலியாக எழுந்தது இக் கற்பனை.

இந்தக் காட்சிகளைப் படிக்கும்போது இதுவும் நடக்குமா? என்ற ஐயம் எழலாம். நடக்காத ஒன்றை நடப்பதாகக் காட்டுவதுதான் கற்பனை. இல்லாததை இருப்பதாகவும், இருப்பதை இல்லாததாகவும், அழிவனவற்றை நிலையானவை என்று பாராட்டுதலும், நிலையுள்ளவற்றை நிலையற்றவை என்று எண்ணி வெறுத்து ஒதுக்கலும் மனிதனுக்குரிய தனிப் பண்பு. இப்படியிருக்க, நம்முடன் இப்பொழுது உறவாடும் கலித்தொகை தலைவி மட்டும் விதிவிலக்கா என்ன?



# தாயுமானவரின் – பராபரக்கண்ணிகள்

**Couplets in venerable adoration of the Omnipotent and Omnipresent**

sung by

St. THAYUMANAVAR

30

Worship when performed with all love, becomes the trouble-free pathway to reach the Supreme Self. Both the body and mind should be free from all impurities when we go to worship. The cleanliness of the body matters little, if the five senses are shorn of their temptations. If the worship is done so, with such a purity of senses, pure knowledge would dawn. This is brought out in the following couplet.

பஞ்சசுத்திசெய்து நின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே

(பொ—ரை) ஐம்புலத்தூய்மையுடன், உன்னை நெஞ்சகத்திலேயே பாவித்து பூசைசெய்தால் பரஞானம் விளங்கித் தோன்றும்.

Oh............Lord Supreme. Divine knowledge will dawn unto those who with their purified senses worship you within the heart.

———

(தொடரும்)

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Art's College, Arulnandi Nagar.

# வினைப்பகை அஞ்சுவர் விழுமியார்

நெல்லை, திரு. ந. சோக்கலிங்கம் அவர்கள், பி. ஏ.,

நாட்டிலே ஒரு பழமொழி நாளும் பேசப்பெற்று வருவதை நாம் செவிமடுக்கின்றோம்; ஆனால், அஃதுணர்த்தும் அரும் பொருளை உணர்ந்து செயலாற்றுவதில்லை. 'தினை விதைத்தவன் தினை யறுப்பான்; வினை விதைத்தவன் வினையறுப்பான்' என்பதுவே அப்பழமொழி. வினை என்றால் அதில் நல்வினை, தீவினை என்று இரு கூறுக்கி எண்ணுதல் வேண்டும். மேலே கண்ட பழமொழி தீவினை பற்றியே நுட்பமாகக் கூறுகின்றது என்பது ஒருதலை; செந்நெல் விதைத்தவன் அது தன் பயனைத் தருகின்ற போது, வேறு ஒரு பொருளைத் தரும் என்று எதிர்பார்ப்பது மடமையும் பேதைமையுமாகும். எனவே, எப்பொருள் விதைக்கப் பெறுகின்றதோ அதையே பயனாக அறுப்பான். அதுபோல, பிறருக்குத் தீங்கே செய்து வருபவன் தீங்கையே அதன் பயனாக—அறுவடைப் பொருளாகப் பெறுவான்; அதற்கு மாறாக நல்வினை அடைவது என்பது இயற்கைக்கு மாறுபட்ட செயலாகும். ஆகவே வினை விதைத்தவன் வினையே அறுப்பான் என்பது உலகியற்கை. இதனை விழுமியோர் கண்டு அஞ்சுகின்ற அறிவார்ந்த நிலையினை அருங்குறள் பயந்த திருவள்ளுவர் நயந்துரைக்கின்றவாறு நாம் உணர்ந்து தெளிவோம்.

விழுமியார் என்பவர் யார்? விழுமிய நல்லெண்ணம் படைத்த சான்றோர் ஆவர்; மறந்தும் பிறன் கேடு சூழார்; மனத்தின் கண் மாசிலார். விழுமியார் நிலை செம்மை சான்ற நிலையாகும். செம்மை நிலை என்பது முதிர்ச்சிநிலை; தலைமை நிலையாகும். அஃதாவது உண்மை, வாய்மை, மெய்ம்மை ஆகிய மூன்று நிலைகளையும் கடந்து நிற்கும் தலைமைநிலை—முதிர்ச்சிநிலை. ஆகவே செம்மைசான்ற சீரியாரே விழுமியார் எனப்பெறுவர். இனி

---

மலர் 5 பராபவ ஞு சித்திரை இதழ் 9 "பாக்கிய லக்ஷ்மி" மாதர் நல இலாகா, பத்திரிகையில் வெளிவந்துள்ள இக்கட்டுரை, ஆசிரியர் அனுமதியுடன், பிரசுரிக்கப்படுகிறது.

விழுமியாருக்கு எதிராக விளங்குவாரைத் 'தீவினையார்' என்று, அன்னூர் செய்கின்ற தீச்செயல் நோக்கிப் பெயரிட்டழைப்பார் வள்ளுவப் பெருந்தகை. தீவினையார் தீவினை இயற்றுதற்கு ஒரு சிறிதும் அஞ்சார். தீவினை செய்வதற்கு அஞ்சாமல் இருப்பதை 'அஞ்சாமை, அதுவே ஆண்மை' என்று எவரும் கூறுர். மாருக அப்படிப்பட்ட தீவினையாரைக் காணவும் அஞ்சுவர். அஞ்ச வேண்டிய நிலைக்கு அஞ்சுவதில் குறையொன்றும் ஏற்பட்டுவிடாது. அஞ்சாமல் இருக்க வேண்டிய சூழ்நிலையில் அஞ்சுவதும், அஞ்சுகின்ற சூழ்நிலையில் அஞ்சாதிருத்தலும் பேதைமையாகும்; அது பெருமிதமன்று. இதை வலியுறுத்த வந்த பெருந்தகை வள்ளுவர்,

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்" (குறள் : 428)

என்னுங் குறளில் அறிவறிந்த பெரியாரின் தொழிலாகக் கூறினூர். இந்தக்குறிப்பை உய்த்துணர்த்தும் முறையில் அமைந்ததே 'விழுமியார்' என்னும் சொல்.

இனி விழுமியார் அஞ்சுகின்ற வினைப்பகை பற்றிக் காண்போம். விழுமியார் என்போர் அறிவார் எனக் கண்டோம். அன்னூர் உணர்ந்துகண்ட அறிவின் பயன் பற்றிச் சொல்லும் போது 'அறிவினுன் எல்லாம் தலை' என்று கூறுவார். தீய செயல்கள் தீமையையே விளைவிக்கும்; நன்மையையோ, நற்பயனையோ நல்காதென்பதுறுதி. அப்படிப்பட்ட தீய செயல்கள் தீயைவிடக் கொடியது. தீ, தான் பட்ட இடத்திலே பற்றிக்கொண்டு தொடரும்; அணைப்பதற்குரிய செயல் விரைந்தவுடன் அணைந்து அமைதியாகிவிடும். அதாவது நெருப்பு அந்த இடத்தில் அழிவை ஏற்படுத்தும். ஆனூல் தீவினையோ வேறு காலத்திலும் வேறு இடத்திலும் பற்றித் தொடரும். எனவேதான் செஞ்சந்துணுக்குறுமாறு எரிந்துகாட்டும் நெருப்பைவிட, வெளித்தோற்றத்தில் கனன்று எரியும் தீயைவிட, வெளியே தோன்ருமல் மூள்கின்ற தீவினை மிகக்கொடியது ஆகும். அந்தத் தீவினையைக் கண்டு அஞ்சுவது அறிவார் தொழில்; அப்படிப்பட்ட தீவினை கண்டு அஞ்சி நின்றவர்தம்மையே 'விழுமியார்' எனச் சிறப்பித்துரைத்தார்.

"தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்". (குறள் : 202)

அஞ்சி நிற்கின்ற அளவிற்குத் தீவினையும், தீவினையாரும் பெருமை பெற்றிலர். யாராவது தனக்கு நோய் வர வேண்டும் என்று எண்ணுவார்களா? 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று மதித்தொழுகின்ற மாண்புதன்னை அறிந்தவர் நோயை வரவேற்க மாட்டார். அதே நிலைதான் தீவினை செய்த லால் தீவினையை வரவேற்றலும் ஆகும். வேறு ஒரு கோணத்தி லும் இதைச் சொல்லலாம். துன்பம் தன்னை வருத்தக்கூடாது என்று எண்ணுகின்ற ஒருவன், தான் பிறருக்குத் தீமையான செயல்களைச் செய்யாதிருத்தல் வேண்டும். நோய் எப்படி சமு தாய வளர்ச்சிக்குப் பகையோ அதே போன்று தீவினையும் பகை தான். எப்படிப்பட்ட பகைமை உணர்வு கொண்டாரும் அப் பகைமையிலிருந்து பிழைத்துக்கொள்ள வழிவகை உண்டு. ஆனால் தீவினைப்பகையாகிய பகையே ஒருவனை விடாது பற்றிக் கொள்வதால் இப்பகையிலிருந்து பிழைத்தல் என்பது முயற் கொம்பே! தீவினை செய்தவன் தான் எங்குச் செல்வினும் அவனோடு போரிடும் வினைப்பகை. எனவேதான் ஏனைப் பகைக் கும் உய்வுண்டு; வினைப்பகைக்கு உய்வே இல்லை என்றனர்.

மேலும் இவ்வினைப்பகை நம்மை எப்போதும் பின்தொடர்ந்து வருகின்ற நிழல் போலவே தொடரும். மனித நிழல் மறைவதே இல்லை. அது போலத் தீவினை, வினைப்பகை செய்தாரை அழிப் பதற்காகவே அன்னார்பின் தொடரும். நோயெல்லாம் நோய் செய்தார் மேல்தான் தொடரும். தீவினை செய்வதனால் விளையும் பயன் தீவினையே! மேலும் உலகம் அவனைத் தீவினையார் இனத் தில் வைத்து எண்ணிவிடும். எனவே, அஞ்சுகின்ற நிலைக்குரிய வினைப்பகை நெருப்பை விடத் தீயது; நிழல் போலும் தொடர் வது; நீங்காதது; பழியைத் தருவது. இதனை உய்த்துணர்ந்த கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் பேருடைய பாண்டி மன்னன்,

'........பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிரும் கொடுக்குவர்;
பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்....' (புறம் : 182)

என்று கூறி விழுமியார் நிலையை விளக்கியுரைத்தான். ஆகவே நெருப்பினும் கொடிய தீவினை, நிழல் போலத் தொடரும் நீர்மையும் பழியை உண்டுபண்ணும் பான்மையும் மிக்க வினைப்பகை கண்டு, பெரிதும் அஞ்சினர்—அஞ்சுவர் விழுமியார் என்பதைக் கண்டோம். நாமும் வினைப்பகை கண்டஞ்சும் விழுமிய நிலை தனை எய்துவோம்!

---

## ஔவைக்கு அருளிய அறிவுக்கன்பனே!



எடுப்பு

திருப்புகழ் அமிர்தம் திருவாய் பொலிய
அருட்கை வேலால் அருள்வாய் முருகா! (திருப்புகழ்)

தொடுப்பு

அறிவுக் கனியை உருவில் சிறுவனாய்
ஔவைக் கருளிய அறிவுக் கன்பனே! (திருப்புகழ்)

முடிப்பு

"முருகா" என்றே உருகும் உள்ளம்
பெருகும் இன்பம் பெற்றிட என்றும்
கருணைக் கரத்தால் அருளை அருளும்
திருப்பரங் குன்ற முருகப் பெருமானே! (திருப்புகழ்)

S. V. பதி,
மதுரை.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 17. இதழ் 5-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

The joy in God which shines in our next hymn evidently rests on some experience of divine grace which we should have liked to hear more definitely described.

69. பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூ
 ரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

69. O madman with the moon-crowned hair,
 Thou lord of men, thou fount of grace
How to forget Thee could I bear?
 My soul hath aye for Thee a place.
Venney-nallur, in "Grace's shrine"
 South of the stream of Pennai, there
My father. I became all thine;
 How could I now myself forswear?

(To be continued)

---

# திருக்கோண்டீச்சரம்

தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவர்கள்.

—<O>—

முன்னுரை:

உலகிலேயுள்ள சகல உயிர் இனங்களைக் காட்டிலும் மனிதன் மட்டும் உயர்வாகக் கருதப்படுவதேன்? அந்த மனிதனிடம் ஒரு உயர்ந்த குணம் இருக்கிறது. அது, தன்னைப்பற்றி ஆராய்கின்ற குணமாகும். அந்த நிலையில் வைக்கப்பட்டதே அறிவாகும். ஆன்மாவைத் தூயதாக்கும் தன்மை அதற்கு உண்டு எனின் மிகையல்ல.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்" என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாக்கின்படி உபதேச அளவே நமது குணமும், பெருமையும் இருக்கும்.

"கண்ணிற் சிறந்த உறுப்பில்லை, கொண்டானில் துன்னிய கேளிர் பிறர் இல்லை" என நவின்ற நான்மணிக்கடிகை, 'கண்' நமக்குச் சிறந்த உறுப்பாதலை உணர்த்துகின்றது. அப்படி அந்தக் கண்ணானது சிறந்த உறுப்பாதல் பற்றியே அதைத் தகுந்த இடமான முகத்திலே மிகவும் பாதுகாப்போடு வைத்துப் படைத்துள்ளார் கடவுள். அந்தக் கண்ணைக் கொண்டு உலகை நோக்குகின்றோம். அப்படி நோக்குவதோடு இருந்துவிட்டால் முழுமையைப் பெற்று விட்டதாகாது. அந்தக் கண்கொண்டு பார்க்கப்படுகின்றதான வழியோடு உலகைப் படைத்த இறைவனது உண்மையையும் காணமுயல வேண்டும்.

கண்ணுக்குப் புலப்படாதவர் கடவுள். ஆனால் காணப்படாத அவர் இல்லையென்றால் அது சூன்யம். ஊனக் கண்ணால் காண்டல் முடியாது, ஞானக் கண்ணால் காண இயலும். இதை,

"ஊனக்கண் பாசம் உணராப்பதியை
ஞானக்கண்ணிற் சிந்தை நாடி"

எனும் மெய்கண்டார் வாக்கு மெய்ப்பிக்கும்.

ஆராய்ச்சியினலே 'நல்லது' எனப் புலப்படுவதைப் பற்றிப் பேசவேண்டும், கேட்க வேண்டும், ஆவல் கொள்ள வேண்டும். கற்றலிற் கேட்டல் நன்றென்பர் நல்லோர். மாட்சிமை இல்லாததும், மயக்கத்தால் வருவதும் பிறப்பாகும். இந்தப் பிறப்பைப் 'பேதைமை' என்றுர் வள்ளுவர். துக்கமென்பது அறியாமையிலே துவங்குகின்றது; அதுவே பிறவிக்குக் காரணம். துக்கம் நீங்க உபாயம் அஞ்ஞானம் அழியவேண்டும் என்பதில் அடங்கி விட்டது. அப்படி அஞ்ஞானம் அழிந்த போது பிறவி ஒழிகின்றது.

வீட்டுக்கு நிமித்தகாரணன் இறைவன். அவன் செம்பொருளாக இருக்கிறுன். அவனைக் காண்பதுவே ஒவ்வொருவர்க்கும் மெய்யுணர்வாகும். எல்லாப் பொருளினும் மேம்பாடுடையது — சிறப்பென்பதாலுல் அதுவே செம்பொருளாகும்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு" என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாயுரையைக் கேட்கும் போது 'மருளானும்மாணுப் பிறப்பு' எனக் கூறுவதையும் கேட்கவேண்டியிருக்கிறது. பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளும் காலம் மருள் எனும் மையலில் சுழல்கின்ற காலம். அந்தக் காலம் விளைவிக்கும் பலாபலன்கள் 'நல்வினை இல்லை, தீவினை இல்லை – மறுபிறவி இல்லை, தெய்வமில்லை' என்பதையே மூச்சாக்கிப் பேசவைக்கும். உண்மை நூலல்லாததை உண்மையென்று நம்பவைக்கும் அடித்தளம் மருளாகும். அவ்வாருயின் அம்மருளைத் தீர்க்க வழி? 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்ற பட்டினத்தடிகள் வாக்கும், 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற மணிவாசகமும் வழிவகுக்கும். குறிப்பாகக் கூறவேண்டுமானுல் 'உள்ளமுருகின் உடன் ஆவார்' என்று பேசும் திருவுந்தியாரைச் சிந்தித்தலே போதும். அப்போது 'உருகிய உள்ளத்துக்கே இறைவன் வெளிப்படுவான்' என்ற உறுதியுண்டாகும்.

இந்த உறுதியிலேதிளைத்து உண்மையான அனுபவப்பக்குவம் வந்து மெய்ப்பொருளாம் பரம்பொருளைக் காண்டலே கருத்தாக—கடமையாக நம்மை ஆக்கிக்கொள்ள இவ்வுலகில் சில பெரியோர்கள் நம்மனோர் பால்கொண்ட கருணையின் காரணமாகப் பல நல்லுரைகள் நவின்று சென்றிருக்கின்றார்கள். அவ்வாக்குகளைக் கேட்பது நமக்கு நல்ல ஞானமாகும். அப்பெருந்தகையாரெல்லாம் கூறிச்சென்ற அநுபவ மிக்கதாம்—தக்கப் பொருளை நாம் சிந்திப்பது என்றும் பெருகும் இன்பம் அடையும் சாதனமாகும். இதை அடிப்படையாகக் கொண்டெழுவதே இக்கட்டுரை.

## கொண்டீச்சரம்:

தஞ்சைமாவட்டத்திலே நன்னிலம்; இவ்வூர் புகைவண்டி நிலயத்துக்கு மேற்கே ஒன்றரைக்கல்லிலே இருக்கிறது இத்தலம். காவிரியாற்றின் தென்கரைத்தலங்களாம் நூற்று இருபத்தேழனுள் எழுபத்திரண்டாவது தலமாக இருப்பது இத்தலம். இறைவன் பசுபதிநாதர்; இறைவி சாந்தநாயகி. தலத்துக்குரியதான தீர்த்தம் க்ஷீரபுஷ்கரணி. இத்தீர்த்தமானது கோயிலைச்சுற்றி மாலை வளையம்போல் வளைந்து அகழியாக இருக்கிறது. வடக்குத் திக்கிலே ஓடுகின்றது ஓர் ஆறு, அதுதான் முடிகொண்டானுறு. வில்வாரண்யம் என்ற பெயரும் வழங்கப் பெறும் இத்தலத்துக்கு.

## உமைதேடிய இடம்:

பூவும் நீரும் கொண்டு செய்யப்படுவதான சிவபூசையைப் 'புண்ணியம்' என்ற சொல்லில் அமைக்கிறார் திருமூலர். மலரும், நீரும் புண்ணியர்க்கே கைவரப்பெறும் பெற்றியால் 'புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு' என்கின்றார் அப்பெருமான். ஆகவே புண்ணியம் கைவரப் பெறுதவர்க்குப் 'பூவும் நீரும்' இருந்தும் இல்லாததாகவே கொள்ளல் தெளிந்த பொருளாம்.

அப்படிப் பூவுநீரும் கொண்டு இறைவனைப் பூசித்தால் அந்த இறைவன் அருள் வழங்குவான் எனப்பேசுகின்றார் அந்தச் சிவயோகி.

ஆனால் அந்த எளியமுறையை உணராமல்—ஏற்காமல்—அதன்படிச் செய்யாமல் கணக்கற்ற பாவிகள் நழுவுகின்றார்கள். இறைவனை அணுகும் உபாயம் உணரா அவர்கள் நிலைகண்டு வருந்துகின்றார் அந்த முனிவர்:

"புண்ணியம் செய்வார்க்குப்பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியாநிற்கும்
எண்ணிலிபாவிகள் எம் இறை ஈசனை
நண்ண அறியாமல் நழுவுகின்றாரே"

நீரைப்பிரித்துப் பாலைப்பருகுமாம் அன்னம். அதுபோல ஆன்மாவானது அலையும் நிலையைவிட்டுத் தியானவகையிலே சுத்திசெய்து கொள்ளுதல் வேண்டும். இறைவனைப் பூசனை செய்தல் அன்புடைமைக்கு அடித்தளமாகிறது. அவன் புகழ் ஓதுவதால் பொறாமை போன்ற தீயகுணங்கள் அகன்றோடுவது இயல்பாகும். நீரின் மேல் எழுதப்படுகின்ற எழுத்து எவ்வித பலனையும் தரமுடியாது. ஆதலால் ஆகமப்பொருள் அறியாதபோது அன்புடைமையைப் பெறல்முடியாது. ஆகமத்தில் ஆலய அமைப்பு, இறைவனை வழிபடும்முறை, திருவிழாக்களது உண்மை குறிப்பு ஆகியன குறிப்பிடப்படுகின்றன. அதனை உணர்ந்து இவ்வுலகம் உய்ய-கருணையின் காரணமாய் இறைவன் மொழிந்துள்ளான். தூயதாம்தன்மையை உயிர் அடையும் உபாயம் தூமறைபாடும் வாயானால் அளிக்கப்பட்ட ஆகமத் தெளிவே அடிப்படையாம்.

ஊழிக்காலம் என்றபோது பனிக்காலமில்லை, மழைக்காலமில்லை, வெயிற்காலமில்லை: ஒரே நீர்ப்பெருக்கம். அப்போது இறைவன் தன்னுடைய அருட்சத்தியாய உமாதேவிக்கு ஆகமத்தை அருள் செய்துள்ளான். அம்மைக்கு அருளியதாம் தன்மை அவள் வழி உயிர்கள் பெற்றுக்கொள்வர் என்பதேயாம். 'உமையலாது உருவமில்லை' என்ற அப்பர்வாக்கிலே உமையென்னும் சொல்லில் கருணை, தயை என்ற பொருள் அடங்கியிருத்தல் காண்க.

உலகமெலாம் ஈன்ற அம்மையாம் காமாட்சி "இங்கு நாத நீ மொழிந்த ஆகமத்தின் இயல்பினால் உன்னை அருச்சனைபுரியப்

பொங்குகின்றது என் ஆசை'' என்று "மெய்ப்பூசை எய்த ஆகம விதியெலாம் செய்தாள்'' என்பதாகத் தொண்டர் சீர்பரவ வல்ல சேக்கிழார் குறிப்பிடுகின்ருர். இந்தக் காஞ்சி விளக்கப்படி ஆகம விதிப்படி இல்லாத-செய்யப்பெருத பூசை மெய்ப்பூசை யாக முடியாது. ஆகவே சிவபூசையே புண்ணியமெனக் கொள்ள லாம்; அப்படிக்கில்லாததைப் பாவமென்று கூறிவிடலாம்.

இறைவி ஏற்றக் கல்யாணம் நம் பொருட்டே, அந்த அம்மை செய்த பூசைகள் நாம் வாழ்வதற்கே, அவள் செய் கின்ற திருவிளையாடல் அனைத்தும் நம்மை வாழ்விப்பதற்கே. நம் பொருட்டு அந்தப் பராசத்தி என்றும் குன்ரு நிலையில் அருட்கண் செலுத்துகின்ருள். அதனுலே மீன நோக்குடையவ ளாளுள். உயிர்களை ஈடேற்றும் பொறுப்பு அந்த உலக மாதா வுக்கேதான் உண்டு. அதோடு மட்டுமல்ல. பொறுப்பேற்ற முறையில் பூரிப்படைந்து உயர்வான இரக்கங்கொண்டு உயிரி னங்கள் நன்மையடைய இறைவனை வேண்டுகின்ருள் என்று பாடுகின்ருற் நந்தியருள் பெரு செந்தமிழ் யோகி:

"அம்பன்ன கண்ணி அரிவை மனேன்மணி
கொம்பன்னநுண் இடைக் கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாள்தோறும்
நம்பனை நோக்கி நவிலு கின்ருளே.''

திருமூலநாயனுர் குறிக்கின்ற அந்த உமை நம்பொருட்டு எல்லா திருவிளையாடல்களும் செய்கின்ருள். இந்தக் கொண் டீச்சரம், உமை தேடிய இடமாக இருக்கிறது. உமையம்மை பசு வடிவம் கொண்டு இறைவனைத் தேடுகிருள் என்பது வில் வாரண்யம் விரிக்கும் வரலாறு. எப்படித் தேடுகின்ருள்? தனது கொம்பினுல் நிலத்தைக் கிளறிக்கொண்டு உழுவது போன்று தேடுகின்ருள். அவ்வாறு தேடும்போது இறைவன் அகப்படு கின்ருன். அப்படி அந்தப் பரமன்-சிவலிங்கத்தின் மேல் கொம்பு முனைப்பட்டுக் குருதி (ரத்தம்) பொங்கிப் புண்ணு கின்றது.

பெருமான்மீது பட்ட அந்தக்காயத்தைப் போக்கத் தன்னு டைய தூயபாலினுல் அபிடேகித்து அதனுல் நலப்படுத்தி

வழிபாடு செய்கின்றாள். இதனால் பாசந்தன்னை யறுத்தலும்–பசுபோதம் நீங்கப்பெற்றுப் பதியோகம் பெறுவதும் உயிர்களுக்கு உளவாகும் பெரிதாம் உண்மையை உமையம்மை நமக்குப் புலப்படுத்துகின்றாள். சிவலிங்கத் திருமேனியிலே–உச்சியிலே கொம்பினால் பட்டவடு இன்றும் இருக்கிறது. அது வரலாற்றை உணர்த்திக்கொண்டிருக்கிறது.

அப்பரின் அறவுரை:

'தமிழன் என்ற இனிமையான சொல்லினை முதன்முதலில் புதிது படைத்துத்தமதுபாடலிலே பெரிதும் மகிழ்ந்தவர், 'தொண்டுமனப்பான்மை' என்பதோர் உணர்வினை முதன்முதலில் இந்த நாட்டிலே விதைத்த பெருமையை உடையவர், சிறந்த தவமுனிவர்–சமயாசிரியர்–வரலாற்றுத்தலைவர் திருநாவுக்கரசர். அலகில் கலைத்துறைதழைக்க – அருந்தவத்தோர் நெறிவாழ–உலக இருள் நீங்கி ஒளி விளங்கும் ஞானக்கதிராகத் திரு அவதாரம் செய்த அந்தப் பெரியவருக்கு 'அப்பர்' என்பதோர் பெயரிட்டார் ஆளுடைப்பிள்ளை.

அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின்துறை வெல்லவும், தாவில்சராசரங்கள் எல்லாம் சிவம்பெருகவும் பாடுபட்ட ஆளுடைப்பிள்ளையென்கின்ற ஞான சம்பந்தப் பெருமான் 'அப்பர்' என அழைத்தார். தேசம் உய்யவந்தவர்–தமிழ்மொழித் தலைவர்' என்றெல்லாம் நாவரசைக் குறிப்பிடும் சேக்கிழார் பெருமான் 'வருஞானத்தவமுனிவர் வாகீசர் பெருநாமச்சீர்பரவலுறுகின்றேன்' என்று துவங்குகின்றார் என்றால் அவரது நாமப்பெருமையை அளவிடல் முடியாதாம். ஆகவே 'அப்பர்' என்ற சொல்லுக்குத் 'தந்தை' என்பதே யன்றிப் 'பெரியவர்' என்ற பொருளும் பல ஒப்புதல் காரணம்பற்றிக் கிடைக்கும் உண்மையாகும். பேச்சுக்குமட்டும் பெரியவராயில்லை–செயலில் அவர்பெரியவராய் நின்றார்.

'காவளர்த்தும், குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெரு கநல்கியும் நானிலத்துள்ளார்
யாவர்க்கும் தவிராத ஈகை வினைத்துறை நின்றார்''

என்று சேக்கிழார் பெருமான் அவர்நின்ற நிலையை—செய்த நல்வினைகளை நனிசிறந்த முறையிலே தெரிவிக்கின்றார். விருந்தினரைப் பேணுதல் என்று சொல்லப்படும் அறம், இல்லறங்களுள் சிறந்த தென்பதை விளக்கியவள்ளுவர் ‘உபகாரம்’ என்பதைப் பொருளாகக் கொண்ட ‘வேளாண்மை’ செய்தலின்பால் இயம்புகின்றார். ஆகவே நாவுக்கரசர் பெருமானுக்கு இடப்பெற்ற ‘அப்பர்’ என்னும் சொல் ‘பெரியவர்’ என்னும் பொருளைத்தந்து ‘உபகாரி’ என்னும் நிலைக்கு உரியவராக்குகின்றது என்பது பொருத்தமுடையதே. ஆகவே வழிபடத்தக்கவரும்—வணங்குதற்குரிய அறிஞராக இருப்பவர் அப்பர் அடிகள்.

அழியாத்தன்மை வாய்ந்தது எது என்று கேட்டால் அதற்குரிய விடை ‘அறம் ஒன்றே’ என்பார் வள்ளுவர். மனிதர்கள் பெற்றுள்ளதான உடல்-உடமை-பிற எல்லாம் அழியக்கூடியனவாம். ஆதலால் ‘ஒல்லும் வகையால் ஓவாது செய்யப்படுகின்ற அறம்தான் உற்றதுணை’ யென்று பேசுவார் அவர்.

இதையெல்லாம் ஆதாரமாகக்கொண்டு நாம் பார்ப்போமானால் அப்பரின் அறவுரை நமக்குப் புரியாத புதிராகப்போய் விட ஞாயமில்லை.

மனிதர்களே! கேட்பீராக; இளமைக்குக்கேடு வருகின்றது; அதோடு மட்டுமல்ல, சளியோடு கூடியதாம் இருமல் வந்து எய்துகின்றது. அதெல்லாம் வந்தால் அல்லலே யாம். ஆகவே அதெல்லாம், வருவதற்கு முன்னதாகப் பாம்பணிந்த பரமன் — ஆம், கொண்டீச்சரத்துக்கோயில் கொண்ட இறைவனை நாள் தோறும் வணங்குங்கள். அப்படி வணங்கினால் அது உமக்கு நல்லமுறையாக இருக்கும் என்ற விளக்கத்தில்,

“கேளுமின் இளமையது கேடுவந்து
ஈளையோடிருமலது எய்தன்முன்
கோளரவணி கொண்டீச்சுரவனை
நாளுமேத்தித்தொழுமின் நன்காகுமே.”

என்று பாடுகின்றார். அப்பரின் அறவுரை உறுதியாகவே இருப்பது இப்படிப்பல இடத்தும் கண்டுதெளியலாம். ‘சொற்கு உறுதி அப்பர்’ எனச் சொல்லவும் வேண்டுமோ!

அப்பரது அருள்மொழி:

உலகத்தின் உண்மை உணர்வுகளைக் கண்டு துன்பமுற்று அதனால் உய்ந்தவர் நாவரசர். இவ்வுலகிலே என்பத்தோராண்டு வாழ்ந்து வளம் பெருக்கி உயர்ந்தவர். களவுபடாத காலந் தொட்டுக் கடவுளினது அருளிப்பாட்டினை அவனிக்கு எடுத்துக் காட்ட அளவுபடாத அன்போடு நடையருப் பெருந்துறவு பூண்டு செந்தண்மையால் செழுந்தமிழ்ப்பாடல்கள் பாடிய பாவேந்தர்.

இளமையிலே பலகலைகளைப்பயின்றார்; பெற்றோர்கள் உயிர் துறக்கநேர்ந்தமையால் தமக்கையாம் திலகவதியார் பார்வையிலேவளர்ந்தார். அதுபோது அவரது பெயர் மருள்நீக்கியார் என்பதாகும். பலசமயங்களையும் ஆராய்ந்த அவருக்கு நம்பரது அருளில்லை யாதலால் சமண்சமயம் புகுந்து அவர்களுக்குத் தலைமை யாயமர்ந்து தருமசேனர் என்றபெயரும் பெற்றார். அக் காலம், எங்கும் சமணசமய போதனையே மிகுந்திருந்ததாலும்–சைவசமயப் பேருண்மையினை வெளிப்படையாகச் சொல்லும் நல்லவர்கள் நாட்டிலே இல்லையாதலாலும் அப்பரடிகள் அச் சமயத்தையே தழுவிநின்றார்.

'உலகத்துப்பொருள்களை யெல்லாம் உள்ளத்தால் உரு வாக்கி, அவை உலவுவதற்குத் தான் நிலைக்களனாக இருந்து, அந்த ஆற்றலே எல்லாம் என்று சொல்லும்படியாகவுள்ள சத்தி யாயுள்ள திருவருள் ஆற்றலைத் தமது திருமேனியாகக்கொண்டு திகழ்பவன் சிவபெருமான் தான்' என்று சொல்லக் கூடிய தகுதி யும் தன்மையும் பெற்ற எவரும் இல்லாமையால் தம் குலப் பெருமையை–தொன்றுதொட்டுவந்து கொண்டிருந்த சைவ நன் னெறியை நழுவவிட மனமில்லாதவராய் அதிகை வீரட்டான இறைமுன் குறைகூறிப் புழுங்கினார் திலகவதியம்மையார்.

புத்தரை வாதில் வெல்லத் தில்லைவாழந்தணர் கனவிலே மணிவாசகப் பெருமானைக் காட்டினார். ஆனால் அப்பர் பெரு மான் பொருட்டும், திலகவதியார் அன்புக்கும் இரங்கிய இறை வன், சமணரை வெல்வதற்கு உரியார் யாருமிலராகையால் 'சூலை நோயைக் கொடுத்து ஆட்கொள்வதாக' அருளினார்.

அப்பர் பெருமான் அந்த அநுபவப் பயன்களைப் பல இடங்களில் கூறுகின்றார். 'அமணர்கள் தம் அறவுரை கேட்டு அலமந்தேன்' என்ற ஐயாற்றுப் பதிகம் ஓர் விளக்கமாகும். அமணரது அறவுரை கேட்டுத் தெளிவில்லாத கருத்தனாய்க் கலங்கினேன் என்று அவர் கூறும் அருளார்ந்த அநுபவம் நமக்கு இன்று வாழ்விற்கு உரிய அறநெறிப் பாடமாகும்.

## குறிக்கோள்:

கொக்கு, நாரை போன்றவைகள் அசைவில்லாமல் இருக்கும் இயல்பினால் இரையைத் தேடிக்கொள்கின்றன. மீன் கொத்திப் பறவை இரை பெறுவான் வேண்டிக் குறித்த இலக்கிலிருந்து அசையாமல் இருக்கிறது. இந்த முறையில் அசைவற்ற நிலையை நாம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டியது 'இறையை' அடைவதற்கான அடிப்படைக் கொள்கையாகும். இறைவனைக் குறித்துத் தியான உணர்வை நாம் கொள்ளும் போது அப்படி அசைவற்ற நிலையைக் கொள்வது பற்றிய விளக்கங்கள் பல உண்டு. அது ஒரு நெறி — 'குறியைக் குறியாது குறித்தறியும் நெறி' என்று கூறுகின்றார் அநுபூதிப் புலவர். 'குறியொன்றுமில்லாத கூத்தன்' என்பார் மாணிக்கவாசகர். இன்ன தன்மையில்-இன்ன உருவில்-இவ்வாறுள்ளவன் என்று குறியொன்றுமில்லாத கூத்தனை அடைந்த அநுபவத்தை வாதவூரர் அறிவிக்கின்றார். அவை எல்லாம் 'குறிக்கோள்' என்ற லட்சியத்தின் முறை வைப்பில் முயன்று கண்ட இன்பமாகும். உயிர்த் துணையாய இறைவனை உள்கலந்து ஏத்த உபாயம், ஒன்றியிருந்து நினைப்பதுவேயல்லாது வேறில்லை. அதுவே குறிக்கோள். அந்தக் குறிக்கோளில்லாது தான் கெட்டுவிட்டதாகக் கூறிக் கலங்குகின்றார் நாவரசப் பெருந்தகை.

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோளிலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துள்ளானே."

என்பது திருநேரிசையில் உள்ள அருமையான பாடல். உடலுக்கு நல்ல ஒழுக்கமும், உயிருக்கு அன்பும் வேண்டப்படு

வதாகும். வேதம் ஒழுக்கத்தை அளிக்கும்; ஆகமம் அன்பை வளர்க்கும். இந்த இரண்டும் இன்றியமையாத காரணம் பற்றி இவ்வுலகுக்கு இறைவனுல் அருளப்பட்டது என்பது நூல் கூறும். 'உலகியல் வேதநூல் ஒழுக்கமென்பதும், இலகு மெய்ந்நெறி சிவநெறியதென்பதும்' என வரும் சேக்கிழாரது திருவாக்கு அதை உணரச் செய்யும்.

யாக்கை நிலையானதன்று. அது அழிந்தொழியும் நிலையின. ஆயின் அந்த யாக்கையானது பாலப் பருவம், இளமைப் பருவம், கடந்து முதுமைப் பருவம் அடைவதன் முன், சில நாட்களுக்குள்ளதாகவுள்ள பயன்களைப் பெற்றுதல் வேண்டும். பொய்த்துயிர் வாழ்தல் நன்றன்று; அறங்கூறும் நல்லுரை கொண்டு வாழ்வதே வாழ்வாம் – அதுவே குறிக்கோள். நெறியல்லா நெறிதன்னை நெறியாகக் கொள்ளாமல் திருவடியே சேரும் பெருநெறியை வற்புறுத்த வேண்டிக் 'குறிக்கோளிலாது கெட்டேன்' எனக் கூறுகின்ருர் அப்பரடிகள்.

நிலையாமை:

உலகிலே நிலையிலாப் பொருட்கள் நிறைய உண்டு. ஆயின் அதன் அளவு மாளா நிலையில் காண்டலரிது. எண்ணிக் கூறும் ஒரு அளவின் படித்தாகவுள்ளனவற்றைக் கூறுகின்ருர் வள்ளுவர். நிலையற்ற பொருள்களை நிலையாகக் கொள்ளுதல் கூடாது எனக் கூறவந்த அவர் "நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவாண்மைகடை" என்று பேசினுர்.

நில்லாதன எது? நிலையுள்ளன எது? என்ற கேள்வி மலர்கின்றது. இங்கு நில்லாதவை என்று சொன்னதெல்லாம் 'யாக்கை, செல்வம், இளமை' என்பதில் அடங்குதல் பெறப்படும். யாதெனின், அறம் ஒன்றே அழியாத்தன்மை வாய்ந்தது என்ற விளக்கம் தந்தவர் வள்ளுவர். அப்படியாயின் மற்றனவெல்லாம் அழியுந் தன்மையுடையனதான் என்று துணியப்படுகின்றது. அறத்தின் சீர்மையைப் பற்றிப்பேசிய சாத்தனுர்,

"இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா;

புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை யாவது''

என மணிமேகலைக் காப்பிய வழி விளக்குகின்றார். அறத்தை விழுத்துணையாகக் கொள்ளுகின்ற நிலையிலே 'யாக்கை, இளமை, செல்வம்' எல்லாம் நினைவில் வந்து அவை நிலையல்லாதன வென்பதைக்காட்டுகின்றது. 'பாழ்போவது பிறவி' அதனால் 'தாழாது அறம் செய்மின்' என்னும் சுந்தரர் வாக்கும் நோக்குக. 'நண்ணன்மின் செல்வம்' எனக் கூறும் சிந்தாமணி 'நமரங் காள்! நல்லறமே நினைமின் கண்டீர்' என்று அறத்தை வலி யுறுத்திய முறையையும் ஒப்புநோக்குக.

கூடிக்குலவி மகிழ்ந்து கொண்டாடுவது கல்யாணம் போன்ற வைபவங்களில்; அதேபோல் கூடிக் குமுறிக் குரல் கொடுத்துக் கதறுவதோ மரண வைபவத்தில். இரண்டு வகை யும் 'வைபவமே' எனின் முன்பகுதி மணகீதம்; பின் உள்ளது மரணகீதம். இவ்வொலிக்கு இவ்வுலகில் அளவில்லை.

நாம் இறப்பதென்னவோ ஒரே ஒருநாள்! அந்த நாள் எல்லோரும் கூடி அழுவர். ஆனால் ஒவ்வொருநாளும் நாம் அழவில்லை; அப்படி நாம் நமக்காக அழாத காரணத்தினாலே தான் நாம் இறந்துபட்ட போது நம்மைச் சார்ந்தோர் எல் லோரும் பங்கெடுத்துக் கொண்டு அழுகின்றனர்.

பாலப்பருவம், காளைப்பருவம், இளமைப்பருவம், மூப்புப் பருவம் ஆகிய நான்கு பருவங்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கழிந்தபடி யிருக்கின்றன. அந்நிலையில் நாம் நமது வாழ் நாளிலே ஒவ்வொரு நாளாய் இழந்து கொண்டே வருகின்றோம். வீணேகழிக்கின்ற நாட்களை—விரயமாய்க் கழித்து விடுகின்ற நாட்களை நாம் எண்ணி வருந்தவேண்டும் என்பதைக் காட்டி நமக்கு நாமே அழவேண்டும் என்று கூறுகின்றது ஒருபாடல்:

"பாளையாம் தன்மை செத்தும்
பாலனும் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்

மீளும் இவ்வியல்பு மின்னே
மேல் வரும் மூப்புமாகி
நாளும் நாட் சாகின்ருமால்
நமக்குநாம் அழாதது என்னே?''

ஐம்பெருங் காவியங்களுள் ஒன்ருன குண்டலகேசியின் செய்யுட்கள் பத்தொன்பதில் ஒன்ருகும். மறைந்துபோன நூல்களில் இதுவும் ஒன்ருகும். ஐம்பெருங் காவியங்களுள் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய மூன்றும் மகாமகோபாத்தியாய டாக்டர். உ. வே. சா. ஐயர் அவர்கள் சிறந்த முறையில் பதிப்பித்துத் தமிழுலகுக்கு அளித்துள்ளார். குண்டலகேசி, வளையாபதி ஆகிய இரண்டும் தனி நூலாகக் கிடைக்கவில்லை. புறத்திரட்டு என்ற நூலின் வாயிலாக் கிடைத்த செய்யுட்களே குண்டலகேசியின் அரிய சுவைதனை நமக்களிக்கிறது. பௌத்த சமயச்சார்பான நூலான இதற்கு—இதனுடை கொள்கைகளை மறுப்பதற்கென எழுந்த நூல் 'நீல கேசி'. இந்த நீல கேசி ஜைன மதச்சார்புடைய தாகும். ஜைனம், பௌத்தம், போன்ற நூல்கள் நமது சமயத்துக்குப் புறம்பேயாயினும் அதன் பொதுத்தன்மை நமக்கு உடன்பாடே. 'நாளும் நாட்சாகின்ருமால் நமக்கு நாம் அழாதனென்னே?' என்ற குண்டலகேசியினது குரல் நம்மைச் சிந்திக்கவைக்கிறது.

நம்முடைய வாழ்நாட்களை வரையறுத்து நாம் அறிந்துகொள்ளும் ஆற்றல் நமக்கு உண்டா? நம்மை ஆளும் (மந்திரிகள் இல்லை) நோய்கள் எத்தனை? எதைத் தொட்டுப் பார்த்தாலும் முடிவில் அழுகை வருகின்றது. அறிவின்மையால் வருந்த வேண்டாமென்று அறைகூவி அழைக்கின்ருர்.

“நாளும் நம்முடைய நாள்களறி கிலோம்
ஆளும் நோய்களோ ரைம்பதோடா றெட்டும்
ஏழைமைப் பட்டிருந்து நீர் நையாதே
கோளிலி யரன் பாதமே கூறுமே.''

சில நாட்கள்–பல பிணிகள்–சிற்றறிவைப் பேறறிவாக்கும் இப்பாடல் அரன்பாதமே துணையெனக் கொண்டு நிற்கிறது 'இரைதேர் கொக்கு ஒத்து இரவு பகல் ஏசற்று இருந்தேன்',

என்ற மணிவாசகப் பெருமானது அனுபவமும் இங்கு நோக்கின் 'இறை நோக்கும்' உண்மை புலனாகும்.

முடிவுரை:

கொண்டீச்சரத்து இறைவனை வணங்குவதோடு அப்பரின் அருந்தமிழனுபவம் கண்டோம். அப்பொருள் விரிக்கும் விளக்கம் கண்டோம். விதியென வரும் மிடியால் வருந்தாமல் – வேதனையே வடிவாம் தன்மை ஒத்த வாழ்வினை வேறறுக்கும் தொல்வரவாம் 'அப்பரது குறிக்கோள்' அனுபவத்தைப் புணையெனப் பற்றிப் பாடுவோம் பரமனை. அது ஊனமில் பதமளிப்பது உறுதி.

"நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
மாறிலா மலைமங்கை யொர்பாகமாக்
கூறனாருறை கொண்டீச்சர நினைந்
தூறுவார் தமக்கூன மொன்றில்லையே."

---

# இசையும் இறைவனும்

திரு. க. இராசேந்திரன் அவர்கள்.
சென்னை – 24.

இவ்வுலகம் ஒலி மயமாக விளங்குகிறது. ஒலியற்ற ஓரிடத்தை இவ்வுலகில் எங்குங் காணவியலாது. இயற்கையை நுணுகி நோக்கினால் இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் ஒலியெழுப்புந் தன்மையதாயுள்ள பெற்றியை உணரலாம்.

குயிலும் ஒலியெழுப்புகின்றது; மயிலும் ஒலியெழுப்புகின்றது. ஆனால்குயிலொலி கேட்ட மாத்திரத்தே செவிக்கின்பமும், மனத்திற்குக் கிளர்ச்சியும் தருகிறது. ஆனால் மயிலின் குரலொலியோ அங்ஙனம் இன்பம் பயப்பதில்லை. ஆதலின் கேட்ட மாத்திரத்தே இன்பம் பயப்பனவற்றை இசையென்றும், அங்ஙனம் இன்பம் பயவாத வெற்றொலியை ஓசை என்றும் சொல்கிறோம்.

கடலின் அலையோசை சராசரி மனிதனின் செவிகளில் பேரிரைச்சலாக விழுகிறது. ஆனால் கவிஞனின் காதுகள் அவ்வோசையை பாட்டிசையாக உணருவதை பாரதியின் கவிதையில் காணவியலும். 'அலையெற்றி நுரை கக்கியொரு பாட்டிசைக்கும்.' அவ்வலைகடலில் எழும் இன்னிசையில் அன்னை பராசக்தியைக் காண்கின்றார் பாரதி. ஆம்! கேட்குமொலியிலெல்லாம் நந்தலாலாவின் கீதத்தைக் கேட்கும் பாரதி, இசையினூடே இறைவனை உணர்கின்றார்.

"…. …. …. …. …. …. …. …. …. …. அலை
எற்றிநுரை கக்கியொரு பாட்டிசைக்கும்
ஒல்லெனுமப் பாட்டினிலே — அம்மை
ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங்காண்."

என்றும் பாடுகின்றார்,

இசையின் வித்தாய் இலங்குவது 'ஓம்' எனுமோங்கார ஒலி யேயாகும். மூலாதாரத்தில் பிறக்கும் ஓமெனும் உயிரொலி நெஞ்சு, கண்டம், முதலாகிய எட்டு இடங்களிலும் பொருந்தி, எண்வகைப்பட்ட செயல்களால் உருவாகப் பண்ணிக்கொள்ளப் படுதலாலேயே இசை, 'பண்' எனும் காரணப்பெயரைப் பெற்றது. இசை முதலிய பலவும் பிறத்தற்கு மூலமாய் இலங்குதலினு லேயே 'ஓம்' எனுமிவ்வொலி 'மூலமந்திரம்' என்றழைக்கப்படு கிறது. எனவே 'ஓம்' எனுமுயிரொலியின் விரிவால் விளைவதே இசை என்பது தெளிவு.

இசையின் ஆதியாய் இலங்கும் இவ்வோம் எனுமுயிரொலி யின் உட்பொருளாய் அமைந்திருப்பவன் இறைவனே. இறை வன் இவ்வோங்கார ஒலியினுளே ரீங்காரித்து நிற்கிறுன். தாளும், தடமுடியும் காணவியலாது விளங்கும் இறைவனது இருப்பிடம் இவ்வோங்கார ஒலியே என்பதை, மணிவாசகப் பெருமானின் 'உள்ளத்தில் ஓங்காரமாய் நிற்கும் ஐயா,' எனும் இறைவிளி தெளிவுபடுத்தும். மற்றும் இவ்வுயிரொலியினுளே முருகன்தம் திருவுருவைக் கண்டு மகிழ்வதாகப் பாடிப் பரவச மெய்துகின்றுர் அருணகிரியார்.

'ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே
முருகன் உருவங்கண்டு'

எனும் கந்தரலங்கார அடிகள் இதனைக் கூறி நிற்கின்றன

இங்ஙனம் இவ்வோங்கார ஒலியினுளே நீங்காது நிலைபெற் றிருக்கும் இறைவன், இவ்வொலியின் விரிவாக விளங்குகின்ற இசையிலும் விரவிக் கலந்துள்ளான் எனுமிவ்வுடன்பாட்டுக் கருத்து, பாரதியின் பாடல் பழுதற்ற உண்மை என்பதைக் காட்டுகின்றது.

'ஓசை, ஒலியெலாம் ஆனுய் நீயே!
உலகுக் கொருவனுய் நின்றுய் நீயே!'

எனும் திருவையாற்றுத் திருத்தாண்டகச் செய்யுளடிகளும், 'சத்தத்தமிழ்ந்து சகலத்துள்ளாரே', எனும் திருமந்திரமொழியும் இறைவன் இவ்வுலகில் ஒலிமயமாகத் திகழ்வதைக் கூறுகின் றன. எனவே ஓசை, ஒலியெலாம் திகழும் இறைவன் அவ்வோசை யின் பண்பட்ட வடிவாகிய இசையுடன் இணையாமலா நிற்பான்?

பசுவின் உடல் முழுதும் பால் பரவியிருப்பினும் அது வெளிப்படுதற்கமைந்த உறுப்பொன்றின் வாயிலாகவே அது வெளிப்படுகின்றது. இதே போன்று இறைவன் அங்கிங்கெனுத படி எங்கும் நிறைந்துள்ளானுயினும் இசையின் வாயிலாகவே அவன் தனது இன்னுருவை மக்கட்களிக்கின்ருன். இவ்வுண் மையை நன்கறிந்திருந்த பெருமை ஆழ்வார்களையும், நாயன் மார்களையும், மற்றும் பல மெய்ஞ்ஞானப் பெரியார்களையும் சாரும். இதனுலேயே அவர்கள் இறைவனைப் பரவுந்தோறும், அவனை இசை மயமாகவே கண்டு போற்றினர்.

சுந்தரமூர்த்தி நாயனுரின்,

'ஏழிசையாய் இசைப்பயனுய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய்....................'

எனும் மணிவாக்கும் இதனை நனி விளக்கும். மற்றும் இறைவனை எக்காலத்தும் நினைந்து, உணர்ந்து, வனைந்தேத்தி வாழ்ந்த நம்மாழ்வாரும் இறைவனை, 'பண்ணுளாய் கவிதன்னுளாய்,' என்றும், 'யாழின் இசையே,' என்றும் பலபடப் பாடுகின்ருர். மற்றும் அவரது,

'கண்ணுள் நின்றகலான் கருத்தின்கண் பெரியன்
எண்ணில் நுண்பொருள் ஏழிசையின் சுவைதானே'

எனும் பாடலடிகள் இறைவன் இசைமயமானவன் என்பதை அறிவுறுத்துவனவாம். இறைவனுடன் இறைவனுக இணைந்த இராமலிங்க வள்ளலாரும், இறைவன் இயல்பினைப் பாட வருங் கால்,

'பண்ணே பண்ணிசையே பண்மயமே பண்ணின்
பயனே மெய்த்தவர் வாழ்த்திப் பரவுந்தேவே,'

என்று இறைவன் இயல்பை இனிது நவில்கின்ருர்.

'மன்னிய வாய்மொழியாலும் மதித்தவர்
இன்னிசை யுள்ளே எழுகின்ற ஈசனை'

எனும் திருமூலரது தவமொழியும் இக்கருத்தை உறுதிப்படுத்துவ தாம்.

இங்ஙனம் மெய்ஞ்ஞானப் பெரியார்களால் உணரப்பெற்ற இவ்வுண்மையை எல்லா மக்களும் உணர்தல் பொருட்டே இது குறித்த தனிப்பெருங் கதைகள் பல தமிழகத்தில் உலவலா யின. இலங்கை வேந்தன் இராவணன் சாமகானத்தாலும், திரு நீலகண்டர் யாழிசையாலும், ஆனாயனார் குழலிசையாலும், மற்றும் பல ஆழ்வார்களும், நாயன்மார்களும் குரலிசையினாலும் இறைவனது நிறையருளைப் பெற்றனர் எனும் கதைகள், இறைவன் இசைக்குட் பெரிதும் இணங்கி இன்னருள் புரிபவன் என்பதை உணர்த்த எழுந்தனவாம். 'பாட்டிற் குருகும் தமிழ்ச் சொக்கநாதர்', எனும் செய்யுளடிகளும் இக்கருத்தை வலியுறுத் தும். இவ்வாறு இறைவன் இசைகேட்டு இன்புறுமளவில் நில்லாது, தானே இசையை எழுப்பியும் இன்புற்றார் என்பதை, ஈசனையும், இசையையும் இன்னுயிராகக் கொண்ட பாண பத்திரரின் கதை கூறிநிற்கும்.

இவையே யன்றி தமிழகத்தில் விளங்கும் பற்பல தெய்வங் களின் அமைப்புக்களும் இக்கருத்தை விளக்குவனவாகவுள்ளன. காட்டாக' வேய்ங் குழலிசைத்து நிற்கும் கண்ணபிரானின் நிலை, இறைவன் இயற்கையில் இசைமயமாய் இலங்குகின்றான் என் பதை விளக்குவதாம்.

எனவே தீயில் வெம்மையாகவும், நீரில் தண்மையாகவும் திகழும் இறைவனே, பண்ணில் இசையாக இலங்குகின்றான் என்பதை நாமும் உன்னி உணர்ந்தோராய்,

'பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி !
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி !'

என்று இசைத்துப்பாடி அழியா இன்பமெய்துவோம்.



# நிழல்

திரு. ப. இறையரசன் அவர்கள்.
கோடம்பாக்கம், சென்னை-24.

வெறுமையான நெஞ்சத்திலிருந்து எப்படியோ எழுந்த எண்ணக் கதிர் நிலைக்களன் அறியாது தவழ்கிறது. நீலக் கடலுக்கப்பால் படுத்திருக்கும் நெடுங் கரையில் மோதி துகள் துகளாகச் சிதறுகிறது. பின் நிலவு நழுவிச் செல்லும் அடி வானம் என்னும் வெறும் தோற்றத்தை ஊடுருவி பல்கோடி காதங்கள் பறக்கின்றது. ஒளியுமிழும் விண்மீன்கள் கண் சிமிட்டும் எல்லைக் கோட்டையும் தொட்டு மீள்கிறது. ஆனாலும் என்ன? கூட்டினின்று வெளிக்கிளம்பிய பறவைபோல் அகண்ட பெருவெளியில் ஒன்ருய், பலவாய், திரண்டும் விரிந்தும் செல்லும் எண்ணக்கதிர் மீண்டும் புறப்பட்ட இடத்தையே-இந்த இதயத் தையே-புகலிடமாகக் கொள்கிறது. திரிந்த இடங்களிலிருந்து எவற்றை யெல்லாமோ தொகுத்து வந்த எண்ணம்-அதுவாழும் நெஞ்சம்-இந்த நெஞ்சிலே நிழலாய்ப் படியும் பொருளறை நினைவுகள்! நினைவின் நிழலாகத் தொடரும் கனவுகள்-யாவும் ஓர் விந்தைச் சுழற்சியாகவே இருக்கின்றன. ஆனுல் நிழலுக்கு நிழல் விழும் இந்நிலையற்ற வியப்பிலும் ஓர் உண்மை பொதிந் திருக்கலாம்.

நில்லாத உலகத்தில் நிலைக்கும் உண்மை எது? உருவம் எது? எல்லாம் நிழலாட்டமாகவே புலப்படுகின்றன. 'கால மென்ற ஒரு நினைவும், காட்சி என்ற ஓர் நினைவும்' உருவமற்ற தாய் – உண்மையற்றதாய் தெரிகின்றன.

ஆம்! இப்பேருலகு, காலம், இடம் என்னும் வரையறை களுக்குட்பட்ட தென்னும் தத்துவமும் கூட பொய்யாய், பழங் கதையாய் போய்விடுகிறது. ஞாயிற்றைக் காட்டிலும் அளப்

பரிய விரிவுடைய விண்மீன்களை மனிதக் கண்கள் மிகச் சின்னஞ் சிறு மின்மினியாய் உணர்த்துகின்றன. பழுதை பாம்பாகவும் கானலை நீராகவும் காட்டுகின்றது. இவற்றுள் எந்த நிலையை நம்புவது? உலகில் இருப்பவை யாவும் உண்மையா அல்லது நிழலா?

"நேற்று" என்பதை நினைப்பதற்குள் 'இன்று' என்பது கரைந்து 'நாளை' என்பது தோன்றி விடுகிறது. இதழ் மீது தவழ்ந்து ஒரு நொடிக்குள் உதிர்கின்ற பனித்துளி போன்ற உயிரின வாழ்க்கையில் காலமென்பது என்ன? அது வெறும் நிழலா? ஐம்பொறிகளாலும் மனத்தாலும், சிந்தையாலும் உணர்த்தப்படும் யாவும் உண்மை என்பது நிச்சயமில்லாத போது 'காலம்' என்பதும் 'காட்சி' என்பதும் ஏன், இவ்வுலகமே–ஒன்றன் நிழலாகத் தானே தெரிகிறது?

அப்படியானால் முதலும் முடிவுமற்ற மூலவனால் படைக்க முடிந்தது நிலையில்லாத ஓர் பொய்யை, வெறும் நிழலைத்தானா? அதனில் நீயும், நானும் நிழற் பதுமைகளா? ஆம் எனில், நீயும், நானும் அவையும் மூலவனின் நிழல்களே.

'நீ' என்பதும் 'நான்' என்பதும் என்ன? எண்சாண் உடலோடு நிமிர்ந்து நிற்கும் உருவங்களா? அல்லது பல ஆண்டுகளுக்கு முன்னர் தாயின் நிழலாய்க் கருவுக்குள் குழந்தையாய் – முடங்கிக் கிடந்தோமே அந்த உருவங்களா? அல்லது கால ஓட்டத்தின் வேகத்தில் நிலை தடுமாறி இந்த இளமை தேய்ந்து முதுமையை ஏற்கப் போகிறோமே அந்த உருவங்களா?

ஒளியின் நிழலில் பதுங்கி இருக்கும் காற்று, விளக்கையே அணைத்து விடுவதுபோல வாழ்வில் மறைந்திருக்கும் மரணம் உயிரையே விழுங்கி விடுகிறது. தோற்றம் மறைவு ஆகிய இரண்டிற்கும் இடையே உள்ள கணநேரப் பொழுதில்தான் நீயும் நானும் நிழலாகப் படிகிறோம். எனவே 'நீ', 'நான்' 'அவை' யாவும் என்றுமே உருவங்களாக முடிவதில்லை.

நிகழ்காலத்தின் விளிம்பில் ஊசலாடும் யாவும் இறைவனின் நிழல்களே. அந்த நினைவும் கூட கால வெள்ளத்தால் சிதையும் போது வெளிறிய நிழலாகவே மறைகிறது.

குழந்தை, இளைஞன், கிழவன் என்று வாழ்க்கை முதிரும் போது-மரணத்தினின்றும் தான் தப்பமுடியாது என்னும் உணர்வு எழும்போது - தன்னினும் அகண்டதோர் ஆற்றலுள்ள சக்தியைப் பற்றிக் கொள்ள மனம் ஏங்குகிறது. உள்ளத் துடிப்பால், பிறந்த பட்டுப் பூச்சிகள் போன்ற ஆசைகள் அந்தச் சக்திக்குத் தன்னைப் போலவே ஓர் உருவையும், உணர்வையும் படைக்கின்றன. ஆம்! மனிதன் தன் நிழலாகவே இறைவனின் வடிவைப் படைக்கிறான். இறைவன்-மனிதன் இவர்களுள் அசல் யார்? நகல் யார்? வடிவம் எது? நிழல் எது? நிழல் கொடுக்கும் உருவமும் ஓர் நிழல் தானா? பாவம்! இந்தப் புதிர் விடுபடுவதன் முன்பே எண்ணக் கதிர் நிழலோடு நிழலாய் இரண்டறக் கலந்து விடுகிறதே!

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருச்சாழல்

இனித் திருச்சாழலாவன; தெளிந்து தேறின சுத்தான்மாக்களுக்குத் திருவருளனுபவ நிட்டை கூடின காலத்து அடியார்கள், சிவஞானப்பெண்கள் கூடிவிளையாடற்போல. அளவளாவி அடிமைத் திறப்பெருக்கையும், பரமசிவனது அநாதி காருணிய நிறைவையும், அச்சிவானந்தமே திருவுருக்கொண்டு நிக்கிரக வனுக்கிரகம் செய்த பெருமையையும், நிட்களமே சகளமானதையும், சைவசமய சமயப் பொருளையும் கூறி, இன்னும், அவையே, 'அத்துவிதி யன்பிற்றெழு' என்ற திருவருட்பேறுன பரமுத்தியும், மற்றச் சமயப்பேறு சாவிபோன்றது என்றதும், சதா நடன குஞ்சிதபாதத் தெரிசனமே ஆன்மலாப மென்றதும், நாதன் தனது கருணையால் எடுத்த வடிவெல்லாம் அடியார் பொருட்டன்றிச் சிவனுக்கு வடிவில்லை என்றதும், கொண்ட திருவுளக்கோலம் இன்ன பொருட்டென்றதுமான இவற்றை ஒருவர் கதை வினுவியருள, விடை மற்றொருவரருள்வதைக் கதை யழித்து, அநுபூதிக் காதலாக்குதலால், அவை பரஞான வனுபூதி வெளிப்படுதலால், அவையும் விளையாடலான திருச்சாழலெனக்காண்க.

இது கலிவிருத்தமாகத் திருத்தில்லையில் ஓதியது.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை–திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

இத்திருப்பாவில் பரமசிவன் திருமேனியில் பூசிய நீறும். திருவாபரணமான அரவும், திருவாயால் அருளிய மறையும், சிவகாருயணிமானவை என்று கூறும் (தி. – ன.):-

வினு—

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலுங் காணேடீ.

(இ - ள்). தோழியான ஞானப்பெண்ணே! கேள்! நிட்கள பரசிவத்துக்குத் திருவெண்ணீறணிவதேன்? பாம்பை ஆபரண மாக அணிவதேன்? தந்த, தாலு, ஒட்டத்துடன் திருவாயால் மறையருளிற்றே?

விடை—உயிர்த்தோழியான ஞானப்பெண்ணே! கேள்?

பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவ னெவ்வுயிர்க்கு மியல்பானுன் சாழலோ.

(இ – ள்). அடியோங்களை யிரட்சிப்பதாகப் பெருங்கருணை யால் திருவுளங் கொண்டு வெந்த சாம்பல் விரையென்பதாகத் தழற்பொடி சுபாவம்போல, திருமேனியில் தரித்த கருணை, அநாதி முத்த அறிவுடையான் அறைவசனமான சத்தி சாநித் திய சந்நிதி மாத்திரமாக ஆதி முத்தர் கருத்தில் விளைவித்த தொழிய, தத்துவ கரண பசு வர்க்கமல்லவே! சர்ப்பாபரணம், பரித்திருப்பித்த சத்தியை உயிர்க்குத் திரோதானம் நீங்கத் தரித்ததே! இவை திருவங்கமுடைய ஈசன் சருவ வுயிர்க்குயி ரான பெருங்கருணைச் சுபாவனே யொழிய வேறு விகாரபந்தப் பட்ட பொருளல்லன்! அடியின்ப உயிர்த்தோழியே!- எனவருளிய தைக் காண்க.

---

உ

### திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

## ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் ,, ... | 0 | 56 |
| 8* | திருக்கோவையார்–பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) ... | 2 | 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை ... | 1 | 50 |
| 10 | ,, ,, மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) ,, ... | 2 | 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) ,, ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 | 75 |
| 20 | கந்த புராணம் – முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் ... | 2 | 75 |
| 21 | ,, யுத்த தேவ காண்டம் ,, ... | 2 | 00 |
| 22 | ,, தக்ஷகாண்டம் ,, ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை ,, ... | 3 | 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் ,, ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | | |
| | ஷை 24, 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) ... | 0 | 75 |
| 28 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரை ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா– உரையுடன் ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) ... | 0 | 13 |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) ... | 0 | 37 |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) ... | 0 | 37 |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் ... | 0 | 50 |
| 38 | சகலகலாவல்லிமாலை ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 | 60 |

Registered With the Registrar of Newspapers
Under No. R. No. 1485/57.



| | | |
|---|---|---|
| 39 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) ... | 0 75 |
| 40 | திருவசாத்தானக் கல்லெழுக்துக்கள் ... | 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 !3 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1· 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் ... | 0 25 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு ... | 1·37 |
| 53 | டை டை பொருட்பால் 2-ம் பதிப்பு ... | 2·75 |
| 54 | டை டை காமத்துப்பால் டை ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி-தெளிவுரையுடன் (அச்சில்) ... | 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (குறிப்புரையுடன்) | (அச்சில்) |
| 57 | திருவாரூர்-திருப்பதுவல்கள் .. | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs .. | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்ப ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 58, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.